# வேதாந்த பரிபாஷை.










காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,

திருப் பூவண மடம்.

உ

சிவமயம்.

ஓம் - தத் ஸத் பரப் பிரஹ்மணே நம:

ஸ்ரீ தர்ம ராஜ தீக்ஷிதர் அவர்களால்

சம்ஸ்கிருதத்தில் இயற்றப் பெற்ற,

# வேதாந்த பரிபாஷை.




இது

பர சமய கோளரியாரும், மண்டலேசுவரரும்,

உபய பாஷா வேதாந்தப் பிரவர்த்தகாசாரியரும்,

கோவிலூர் மடம், திருக் களர்,

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள்

அவர்கள் மாணுக்கரும்,

திருப் பூவண மடாதிபதியும் ஆகிய,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகளால்

தமிழில் வசந வடிவ மாக மொழி பெயர்க்கப் பெற்று,


மதுரை, ராஜேசுவரி பிரசில்

அச்சிடப்பட்டது.

---

1937.




[விலை அணு எழு.



ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள்

திருப்பூவண மடம்.

मण्डलेश्वरः परसमय पंजाननः उभय भाषा वेदांद प्रवर्तकः

वीरशेखर ज्ञान देशिक शिष्यः तिरुप्पूवण मठातीशः

श्री काशिकानंत ज्ञानाचार्य स्वामिनः

உ

சிவமயம்.

# அணிந்துரை.

மாநுட வாக்கை யெடுத்த மக்களால் விரும்பப் படுவது மாறாத நிலையினை யுடைய மோக்ஷம் ஒன்றே யாகும். அதனை அடைவதற்குச் சாதநம்—கருமம் என்றும், பக்தி என்றும், ஞாநம் என்றும் பலர் கூறுகின்றனர். கருமமும்—சகாம கருமம் என்றும், நிஷ்காம கருமம் என்றும், பக்தியும்—சகாம பக்தி—நிஷ்காம பக்தி என்றும், சகுண மென்றும், நிர்க்குண மென்றும், பிரதீக மென்றும், அஹங்கிரக மென்றும், சகுணப் பிரதீகம் என்றும், சகுண அஹங்கிரக மென்றும், நிர்க் குணப் பிரதீக மென்றும், நிர்க் குண அஹங்கிரக மென்றும், சாதந பக்தி என்றும், சாத்திய பக்தி என்றும், ஞாநமும்—தியாந ஜந்ய ஞாந மென்றும், விசார ஜந்ய ஞாந மென்றும், பரோக்ஷ ஞாந மென்றும், அபரோக்ஷ ஞாந மென்றும், அதிட அபரோக்ஷ ஞாந மென்றும், திட அபரோக்ஷ ஞாந மென்றும் அநேகம் பிரகாரமாக அநேக கிரந்தங்களில் அநேகம் பெரியார் அறைந்திருக்கின்றார்கள். ஆயினும், மோக்ஷம் திட அபரோக்ஷ ஞாநம் ஒன்றானேயே சித்திக்கும் என்பதைச் சுருதி தர்க்க யுக்தி பிரமாண அநுபவங்களோடு தெளிவாகக் கூறுவதில், வேதாந்த சாஸ்திரங்கள் பலவற்றுள்ளும். இந்த வேதாந்த பரிபாஷை என்னும் நூலே மிக உயர் வுடைய தாம்.

இதன்கண் — பிரத்தியக்ஷம் — அநுமாநம் — உபமாநம் — அர்த்தாபத்தி — அநுபலப்தி — விஷயம் — பிரயோஜநம் என்னும் பெயரால், எட்டுப் பரிச்சேதங்கள் இருக்கின்றன. அவற்றில், "லக்ஷணப் பிரமாணங்களால், வஸ்து சித்தி உண்டாகின்றது" என்னும் நியாயப்படி, பிரமாணங்களும், லக்ஷணங்களும், பிரமேய வஸ்து சித்தியும், அதிவியாப்தி, அவ்யாப்தி, அசப்பவ தோஷங்கள்

இன்றி, மஹா மதியினரும் நன்கு உணரு மாறு நிரூபித்து விளக்கப்பட்டிருக்கின்றது. “தத் த்வ மசி” மஹா வாக்கியத்திற்கு, ஜகதஜகல் (விட்டு விடாத) லக்ஷணை யின்றிப் போத மாகும் என்னும் புதிய விஷயமும், நன்கு நிரூபணம் செய்யப் பட்டிருக்கின்றது.

கௌதம — கணத — ஜைமினி முதலியவர்களின் மதங்களின் குற்றங்களையும், தெளிவுபடுத்தித் தெரிவித்திருக்கின்றது. இந் நூலை வாசிப்போருக்கே இதில் உள்ள ருசி வெளிப்படும்.

இந்த வேதாந்த பரிபாஷையினை இயற்றியவர், தர்ம ராஜ தீக்ஷித ராவார். இவர் கி. பி. 1650 வருஷத்தில், கும்பகோணத் திற் கடுத் துள்ள “விளாங் குடி” என்னும் கிராமத்தில், அல்லது, மாயூரத்திற் கடுத் துள்ள “வேலாங் குடி” என்னும் கிராமத்தில், அவதரித்தவர் என்று பண்டிதர்களாற் சொல்லப்படுகின்றது. இவர் பேத திக்காரம், விவரண—பாவப் பிரகாசிகை, வேதாந்த சாரம்—சுபோதினீ வியாக்யாநம் முதலியன இயற்றிய நிருசிஹ்ம ஆசிரம சுவாமிகளின் சிஷ்யரும், 104 கிரந்தங்க ளியற்றிய ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்களின் ஒரு சாலை மாணுக்கரு மாவர். நிருசிஹ்ம ஆசிரம சுவாமிகள், சாலிவாஹந சகம் 1510 தர்முகிஸு நல் லாடிமீ அநுமதி திதியில் வெள்ளிக் கிழமையில் வேதாந்த சார வியாக்யாநம் சுபோதினி முடிந்ததாகக் கூறுகின்றூர்கள். இந் நூலின் ஆரம்பத்திலும், நரசிஹ்ம சுவாமிகளின் மாணுக்கர் என்று தர்ம ராஜ தீக்ஷிதரே சொல்லுகின்றூர். அவரே நிரசிஹ்ம சுவாமி களின் பெருமையினை எடுத்துக் கூறி யிருக்கின்றூர். நிருசிஹ்ம சுவாமிகளின் மாணுக்கர்கள், தர்ம ராஜ தீக்ஷிதர், அப்பய்ய தீக்ஷிதர், பேத திக்காரம் என்னும் நூலுக்குச் சத் கிரியை என் னும் உரை யியற்றிய நாராயண ஆசிரமர் முதலியவர்கள், பெரிய வித்வத் சிஹ்மங்களாக இருந் திருக்கின்றூர்கள் என்று தெரி



கின்றது. கங்கேசோபாத்தியாயர் இயற்றிய அநுமாந தத்துவ சிந்தாமணி யென்னும் தர்க்க சாஸ்திரத்திற்கு, ருசி தத்தர் முதலிய பலர் இயற்றிய பத்து வித உரைகளைக் கண்டித்து, வித்வான்களினது மாது ரமிக்கும்படியாகத், தர்க்க சூடாமணி என்னும் உரை தர்ம ராஜ தீக்ஷிதரால் இயற்றப்பட்டிருக்கின்ற தென்று அவர் வாக்கானே தெரிகின்றது. இன்னும், சத தார் என்னும் வித்வானுல் இயற்றப்பட சோடச பதார்த்த நிருபணம் என்னும் தர்க்க நூலுக்கு உரையும், பிரஹ்ம சூத்ர பாஷ்யத்தின் மீது, பத்ம பாதாசாரியர் இயற்றிய பஞ்ச பாதிகை என்னும் வியாக்யாநத்தின் பேரில், பத யோஜனை என்னும் வியாக்யாந மும், தர்ம ராஜ தீக்ஷிதர் இயற்றி யிருக்கின்றூர் என்று தெரி கின்றது.

இந்த வேதாந்த பரிபாஷைக்குத் தர்ம ராஜ தீக்ஷிதர் புத்திரர் ராம கிருஷ்ண தீக்ஷிதரால், வேதாந்த சிகாமணி என ஓர் விரி வான உரை யியற்றப்பட்டிருக்கின்றது. இந்த வேதாந்த பரி பாஷைக்கு, சிவ தத்தர் என்பவர் அர்த்த தீபிகை என ஓர் வியாக் யாநம் இயற்றியிருக்கின்றூர். ராம கிருஷ்ண தீக்ஷிதர் இயற்றிய வேதாந்த சிகாமணி யென்னும் உரையின் மீது, உதாசீந—அமர தாஸ் ஸ்வாமி என்பவர் மணிப் பிரபை என்று ஒரு வியாக்யாநம் செய்திருக்கின்றூர். இன்னும், தர்ம ராஜ தீக்ஷிதர் புத்திரர், ராம கிருஷ்ண தீக்ஷிதர் தன் பிதாவின் கீர்த்தி சேது முதல் இமா சலம் வரைப் பரவி யிருப்பதாகச் சொல்கின்றூர்.

சம்ஸ்கிருதத்தில், இந்த வேதாந்த பரிபாஷையும், அதன் வியாக்யாந மாகிய வேதாந்த சிந்தாமணியும், மிகக் கெம்பீர முடைய தாக விளங்குகின்றது. இதன் பெருமை கருதித் தமிழ் மக்கட் குப் பயன்படு மாறு மூலத்திற்கு நேராக மொழி பெயர்த்துத் தர வேண்டு மென்று கி. பி. 1913ஸு, திருக் களர் ஸ்ரீ வீர சேகர

ஞான தேசிக ஸ்வாமிக ளவர்கள் மாணாக்கரும், சென்னை—புரசை பாக்கம், ஆநந்தாசிரமம்-வீர-ஸ்ரீ சுப்பய்ய சுவாமிக ளவர்கள் மாணாக் கரு மாகிய, சோம சுந்தர சுவாமிகள் பல முறை வேண்டிக்கொள்ள, அதற் கிசைந்து ஷெ சுவாமிகள் காத்தால் எழுத, யாம் பலருக்கும் உபகாரம் ஆம் வண்ணம், 1913௵ வேதாந்த பரிபாஷையினை மட்டும் மொழி பெயர்த்தனம். இதனை ராமச் சந்திர சாஸ்திரியார் முன் மொழி பெயர்த் திருப்பினும், அது சரியான மொழி பெயர்ப் பும், நேரான மொழி பெயர்ப்பும் இன்மையின், மீண்டும் மொழி பெயர்க்கும்படி தூண்ட, யாம் இசைந்தோம். மொழி பெயர்த்து 24 வருஷங்க ளாகியும், பல இடையூறுகளால் அச்சியற்ற முடியா திருந்தது. இப் பொழுது, திருக் களர், ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிக ளவர்களின் அநுக்கிரகத்தால், அச்சியற்றிப் பலருக்கும் உபகார மாகும் வண்ணம் வெளி வரநேர்ந்து, டப்ள் கிரௌன் 1—16 பேஜ் சைஸ் 28 பவுண் கிளேஸ் பேப்பரில், 112 பக்க அளவினை யுடையதாக அச்சியற்றி முற்றுப் பெற்றிக் ருக்கின்றது.

இந் நூலை வேதாந்தம் படிப்போர் யாவரும் வாங்கி வாசித்து, ஆண்டா—னடிமைத் திறம், தாஸ்ய—தாச பாவம் பேணும் பேத புத்தியினைப் போக்கி, ஏனையோருக்கும் பிரமாண யுக்தி வாயி லாகப் பேத புத்தியினைப் போகும்படி செய்து, சுகியா யிருப்பார் களாக.

1937௵ நவம்பர்மீ திருப் பூவணம்.

காசிகாநந்த ஞானாசார்ய ஸ்வாமிகள்,
திருப் பூவண மடம்.

உ

சிவமயம்.

# விஷய அநுக்கிர மணிகை.

## 1. பிரத்தியக்ஷ பரிச்சேதம் 1—29.

2. அநுமாந பரிச்சேதம்.





3. உபமாந பரிச்சேதம்.



4. ஆகம பரிச்சேதம்.



5. அர்த்தாபத்திப் பரிச்சேதம்.



6. அநுபலப்திப் பரிச்சேதம்.

---

## பாயிரம்.

பொருள்வைநன் னகர்வா ழுகந்தலிங் கேசன்
புநிததா மரைச்சரண் டனையும்,
அருளுடை வீர பத்திர குருவி
னடியைச்சிங் காரவே லவன்றன்,
றெருளுடையப் பாத தாமரை மலரைச்
சிறந்தமுத் தையஞா நியின்றன்,
மருளறு மடியைச் சட்டையப் பேசன்
மலாடி களையுமே பணிவாம்.



சமிநிழ லமரு முக்திரா மேசர்
சரண்டனை யுவகினை வெறுத்தே,
யமிழ்தினு மினிய துறவினை யடைந்த
வருணநல் லசலன்ற னடியைத்,
தமையடைந் தவர்கள் பவந்துடைத் தருளுந்
தண்ணருட் சிதம்பர னடியைச்,
சமைமுதற் குணங்கள் சார்ந்திடும் வீர
சேகர விறைசரண் பணிவாம்.

இருக்குகள் பாவும் வலம்புரிக் களிற்றை
யிருமனைக் குமரவே ளிறையை,
மருக்கமழ் பாரி ஜாதக்காட் டிறையை
மருளக லமிர்தவல் லியினைக்,
கருக்கொடுக் கின்ற பலத்தினைக் கெடுத்துக்
கருணையா லென்றனை யாண்ட,
திருக்களர் வீர சேகர விறைவன்
றிருவடி யிணையினைப் பணிவாம்.

வியப்புறுந் தரும ராஜதீட் சிதனல்
விளங்குநற் றேவவா ணியிலே,
வியப்பினை யடைய வறிஞர்கண் மநமும்
விளங்கும்வே தாந்தப ரிபாஷை,
நயக்குநற் கத்திய மதனிலே மொழிந்தா
னற்றமிழ் மொழியிலே யதனைச்,
சயத்தினை யுடைய காசிகா நந்த
சாமிநன் காற்றினர் மாதோ.

---

# வேதாந்த பரிபாஷை.

## ஸ்துதி.

எதுபர மாத்மா வாயுமே சச்சி தாநந்த விக்கிர கமுமாய்
எதனத வித்தை விலாசத்தி ஞலே யிந்தநற் பூதபௌ திகங்க
டவறற வுண்டாக் கப்படு கின்ற தன்மையோ வதனைநன் ருகக்
கதுமெனக் கரண மூன்றிஞ லும்மே கனிவுறப் பணிந்திடுகின்றேன்.

எவருடையண் மைவிருக்கு மாணவராங் கேசரியா
லியற்பேத வாதியா மிபங்களழிந் தனவோ,
எவர்தாமே யதிகளியா வருக்குமிந் திரரு
மியாவருக்கும் பரமகுரு வாயுமிருப் பவரோ,
எவர்தாமே நிருசிம்ம மெனும்பெயரைப் பொருந்தி
யிலங்கிடுகின் றனரோநே ரியாவருநன் குணர,
அவருடைய பாததா மரைகளநு திநமு
மன்புடன்யாம் வணங்கிவாழ்த் திடுதலைச்செய் திடுவாம்.

வேலாங் குடியெனு மூரில் விளங்கவ சித்திடு பவராய்
எலா நூன்முழு மையினு மிணையின் முயற்சி யுடையவராய்
நாலாஞ் சீமான் வேங்கட நாத ரென்னு நாமமுடைப்
பாலா முலக குருவினது பாத மலரைப் பணிகின்றேன்.

தருமரா ஜாவெ னும்பெய ரறிஞன் றத்வசிந் தாமணி நூலுக்
குரியபத் துரையை யுவப்புடன் கண்டித் துயர்ந்தவா மநமகி ழுறவே
பெரியதர்க் கசூடா மணியெனு முரையைப்பெ யத்தன னவ்வறி ஞன்
தெரியவே தாந்த நற்பரி பாஷை செய்தனன் சிறுமந ருணர. [ருன்

---



ஸ்ரீவீரசேகராய நம:

# வேதாந்த பரிபாஷை.

1. பரமாத்மாவாயும், சச்சிதாநந்த விக்ரகமாயும், எத னவித்யா விலாசத்தினுற் பூத பௌதிகங்கள் சிருட்டிக்கப் படுகின்றனவோ, அதனை நமஸ்கரிக்கின்றேன்.



2. எவரது சமீபத்தில் வசிக்கும் சிஷ்ய ராகிய சிம்ஹங்களால், பேத வாதி ரூப யானைகள் நிவாரணஞ் செய்யப்பட்டனவோ; (எவர்) எதிகளுக் கெல்லா மிந்திர ராயும், பரம குருவாயும், நிருசிம்ஹ மென்னும் பெயரை யுடையவராயு மிருக்கின்றாரோ அவரை நமஸ்கரிக் கின்றேன்.

3. வேலாங் குடி யென்னுங் கிராமத்தில் வசிப்பவ ராயும், சர்வ சாஸ்திரங்களிற் பிரவிர்த்தி யுடையவராயும், ஸ்ரீ மத் வேங்கட நாத னென்னும் பெயரை யுடையவராயு முள்ள ஜநக குரவரை யான் நமஸ்கரிக்கின்றேன்.

4. எந்தத் தர்ம ராஜா வென்னும் த்வரீந்திரரால் சிந்தா மணிக் குள்ள பத்து டீகைகளைக் கண்டித்து வித்வான் களினது மநம் ரமிக்கும்படியாகத் தர்க்க சூடா மணி யென் னும் பெயரினை யுடைய டீகையான திபற்றப்பட்டதோ; அந்தத் தர்ம ராஜா வென்னும் த்வரீந்திர ராகிய வென்னுல் மந்தர்கட்குப் போத மாதற் பொருட்டு வேதாந்தார்த்தங் களை யவலம்பிக்கும் பரிபாஷையானது செய்யப்படுகின்றது.

## 1. பிரத்தியக்ஷ பரிச்சேதம்.

ஈண்டு நிச்சயமாகத் தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷமென்னும் பெயரினை யுடைய சதுர் விதப் புருஷார்த்தங்களுள் மோக்ஷமே பரம புருஷார்த்த மாம். "அவன் மீண்டும் திரும்புவ தின்று" என்ப தாதி சுருதியால், அதற்கு நித்தியத் தன்மை நிச்சயிக்கப்பட்டிருத்தலின். ஏனைய மூன்றற்குமோ, பிரத்தியக்ஷத்தினாலும், "அது எங்ஙனம் ஈண்டுக் கருமத்தினாற் சம்பாதிக்கப்பட்ட லோகம் நாசத்தை யடைகின்றதோ, இங்ஙனமே புண்ணியத்தினாற் சம்பாதிக்கப்பட்ட (பர) லோகம் நாசத்தை யடைகின்றது" என்ப தாதி சுருதியாலும், அநித்தியத் தன்மை யறியப்படுதலான். அதுவும், பிரஹ்ம ஞானத்தாலென, பிரஹ்மமும், அதன் ஞானமும், அதன் பிரமாணமும் விரிவாக நிரூபிக்கப்படுகின்றது.

### பிரமாண லக்ஷணம்.

ஆண்டுப் பிரமா கரணம் பிரமாண மாம். அதில் ஸ்மிருதி வியாவர்த்தமான பிரமாத் தன்மை, அறியப்படாத, பாதிக்கப்படாத அர்த்தத்தினை விஷயமாக வுடைய ஞானத் தன்மையாம். ஸ்மிருதி சாதாரணமோ, பாதிக்கப்படாத வர்த்தத்தினை விஷயமாக வுடைய ஞானத் தன்மை யாம். ரூப மின்றிய காலத்திற்கும் இந்திரியத்தினா லறியப்படுந் தன்மை அங்கீகரித்தலின். தாரையாகச் செல்லும் புத்திக்குப, பூர்வ பூர்வ ஞான விஷயத் தன்மை யின்றி, அவ் வக்ஷண விசேஷ வசிஷ்ட விஷயத் தன்மை யாகலின் ஆண் டவ்வியாப்தி யின்றாம். மற்றும், சித்தாந்தத்தில், தாரையாகச் செலனும் புத்தி ஸ்தலத்தில், ஞான பேத மினறு, பின்னேயோ, எது



வரைக் கடம் ஸ்புரண மாகின்றதோ, அது வரைக் கடாகார அந்தக்கரண விருத்தி ஒன்றே, பல வன்றாம். விருத்திக்குத் தனது விரோதி விருத்தி யுற்பத்தி பரியந்தம் ஸ்திரத் தன்மை யங்கீகரித் திருத்தலின். ஆகவே, அதன்கண் பிரதிபலித் திருக்கின்ற சைதந்ய ரூப கடாதி ஞானமும், ஆண்டு அவ் வளவு காலம் வரை ஒன்றே யாம். ஆகலி னவ்வியாப்திச் சங்கையு மின்றாம்.

அற்றேல், சித்தாந்தத்தில், கடாதிகட்கு மித்யாத் தன்மை யுள தாகலின், பாதிதத்தால் அதன் ஞானம் எங்ஙனம் பிரமாணம் (எனின்,) கூறப்படுகின்றது. பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின் பின்னரே கடாதிகட்குப் பாத மாம். "எவ்விடத்து இவனுக்கு எல்லாம் ஆத்மாவாகவே யாகின்றனவோ, அவ்விடத்து அவன் எதனால் எதனைப் பார்க்கின்றான்" எனனுஞ் சுருதியால், சம்சார தசைக்கண்ணே பாத மின்று.

"எவ்விடத்து த்வைதம் போன்று உண்டாகின்றதோ, அவ்விடத்து இதரன் இதரத்தினைப் பார்க்கின்றான்" என்னும் சுருதியால். ஆகவே, பாதிக்கப்படாத வென்னும் பதத்தால், சம்சார தசைக்கண் பாதிக்கப்படாத தன்மை கருத்தாகலின், கடாதிப் பிரமையி லவ்வியாப்தி யின்று. அது, "தேகாத்ம ஞானம் எங்ஙனம் பிரமாணத் தன்மையாற் கற்பிக்கப்படுகின்றதோ, அங்ஙனமே ஆத்ம நிச்சயத்தால் இந்த லௌகிக ஞானம் பிரமாண மாம்" எனக் கூறப்பட்டிருக்கின்றது. ஆத்ம நிச்சயத்தால் என்பதற்குப் பிரஹ்ம சாக்ஷாத்கார பரியந்த மென்பது பொருளாம். லௌகிகம் என்பதற்குக் கடாதி ஞான மென்பது பொருளாம்.

## பிரத்தியக்ஷப் பிரமாணம்.

அந்தப் பிரமாணங்கள், பிரத்தியக்ஷம், அநுமாநம், உபமாநம், சப்தம், அர்த்தாபத்தி, அநுபலப்தி என்னும் பேதத்தால் ஆறும்.

ஆண்டுப் பிரத்தியக்ஷப் பிரமா கரணம் பிரத்தியக்ஷப் பிரமாணமாம். பிரத்தியக்ஷப் பிரமையோ, ஈண்டுச் சைதந்யமே யாம் "எது சாக்ஷா தபரோக்ஷத்தால்" என்னுஞ் சுருதியால். அபரோக்ஷத்தா லென்பதற்கு அபரோக்ஷ மென்பது பொரு ளாம்.

அற்றேல், சைதந்யம் அநாதி யாகலின், சக்ஷு முதலியவற்றிற்கு அதன் கரணத் தன்மையினாற் பிரமாணத் தன்மை யாங்ஙனம் எனின், கூறப்படுகின்றது. சைதந்யத்திற் கநாதித் தன்மை யிருப்பினும், அதனை யபிவியஞ்சகஞ் செய்யும் அந்தக்கரண விருத்தி இந்திரிய சந்நிகர்ஷாதியினால் உண்டாகின்ற தாகலின், விருத்தி விசிஷ்ட சைதந்யம் ஆதியுடைய தென்று கூறப்படுகின்றது. ஞாந அவச்சேதக்த சன்மையால் விருத்தியின்கண் ஞாநத் தன்மை யுபசாரமாம். அது விவாணத்தில், "அந்தக்கரண விருத்தியில் ஞாநத் தன்மை யுபசாரத்தால்" எனக் கூறப்பட்டிருக்கின்றது.

அற்றேல், நிரவயவமான அந்தக் கரணத்திற்குப் பரிணாமி ரூப விருத்தி யாங்ஙனம் (எனு மெனின்), இங்ஙனமாம். அந்தக் கரணம் நிரவயவ மன்று, சாதித் திரவியத் தன்மை யோடு சாவயவ மாகலின். சாதித் தன்மையும், "அது மநதைச் சிருஷ்டித்தது" என்பதாதி சுருதியினா



லாம். விருத்தி ரூப ஞாநத்திற்கு மநோ தர்மத் தன்மையிலும், "காமம், சங்கல்பம், சந்தேகம், சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம, லச்சை, தீ, பயம் இவ் வெல்லாம் மநமே" என்னுஞ் சுருதி பிரமாண மாம். தீ யென்னுஞ் சப்தத்தினால் விருத்தி ரூப ஞாநம் கூறப்படுகின்றது. இதனானே, காமாதிகட்கும் மநோ தர்மத் தன்மை யாம்.

அற்றேல், காமாதிகட்கு அந்தக்கரண தர்மத் தன்மையில், "நான் இச்சிக்கின்றேன், நான் அறிகின்றேன், நான் பயப்படுகின்றேன்" என்ப தாதி ஆத்ம தர்மத் தன்மையினைக் கிரகிக்கு மநுபவமானது எங்ஙனம் பொருந்தும் (எனின்,) கூறப்படுகின்றது. இருப்புத் துண்டத்திற்குத் தகிக்குந் தன்மை யில்லாவிடினும், தகிக்குந் தன்மைக் காசிரயமான வந்நியின் தாதாத்மிய வத்தியாசத்தினால் எங்ஙனம் "இருப்பு தகிக்கின்றது" என்னும் வியவகார மாமோ, அங்ஙனமே, சுகாதி யாகாரமாகப் பரிணமிக்கும் அந்தக் கரணத்தோடு ஐக்கியாத்தியாச மிருத்தலால், "நான் சுகி, நான் துக்கி" என்ப தாதி வியவகாரம் உண்டாகின்றது.

அற்றேல், அந்தக் கரணத்திற்கு இந்திரியத் தன்மையால், அதீந்திரியத் தன்மை யிருத்தலின், பிரத்தியக்ஷ விஷயத் தன்மை யாங்ஙனம் (எனின்,) கூறப்படுகின்றது. அந்தக் கரண மிந்திரிய மென்பதன்கண் பிரமாண மின்று. "* மநதினை ஆறுவதாக வுடைய இந்திரியங்கள் (15—7)" என்னும் பகவற் கீதை வசநம் பிரமாண மெனின் அற்றன்று, இந்திரிய மின்றிய மநதாலும் ஆறென்னும் எண்ணிக்கை

* அந்த இடம் = பகு புலன்க ளாறும். 15-12.

பூரணமாவதில் விரோத மின்மையின். இந்திரியத்தின்கண்
ணுள்ள எண்ணிக்கையின் பூரணம் இந்திரியத்தினாலே யாம்
என்னும் நியம மின்றாம். "எஜமானனை ஐந்தாவதாக
வுடையவர்கள் இடாவைப் புஜிக்கின்றனர்" என்னுமிடத்து
ரித்விக் தவின்கண் ணுள்ள ஐந் தென்னும் எண்ணிக்கைக்கு
ரித்விக் கின்றிய எஜமானனோடு பூரணமாதல் பார்க்கப்படுத
லினாலும், "மஹா பாரதத்தினை ஐந்தாவதாகக் கொண்ட
வேதங்களை அத்தியயநஞ் செய்வித்தார்" என்பதாதியில்,
வேதத்தின்கண் ணுள்ள ஐந் தென்னும் எண்ணிக்கைக்கு
வேத மின்றிய பாரதத்தினோடும் பூரணமாதல் பார்க்கப்
படுதலினாலும், "இந்திரியங்களினின்றும் அர்த்தங்கள் பரங்
கள், அர்த்தங்களினின்று மநம் பரம்" என்ப தாதி சுருதி
யால், மநதிற்கு இந்திரிய மில்லாத் தன்மை யறிப்படு
தலினாலும்.

இங்ஙனம், மநதிற்கு இந்திரிய மில்லாத் தன்மையில்,
சுகாதிப் பிரத்தியக்ஷத்தின் சாக்ஷாத்கார முண்டாகாது;
இந்திரிய ஜந்நிய மன்றாகலின் என்று கூறற்க, இந்திரிய
ஜந்நியத் தன்மையினால் ஞாநத்திற்குச் சாக்ஷாத்வம் இன்
றாம், அநுமிதி முதலியவற்றிற்கும் மநோ ஜந்நியத்தால்
சாக்ஷாத் தன்மை வருதலினாலும், இந்திரிய ஜந்நிய மல்லாத
ஈசுவர ஞாநத்திற்குச் சாக்ஷாத் தன்மை வாராமையானு
மென்க.

சித்தாந்தத்தில், பிரத்தியக்ஷத் தன்மைப் பிரயோஜகம்
யாதெனின், ஞாந கதப் பிரத்தியக்ஷத் தன்மையின் பிரயோ
ஜகத்தினை வினவுகின்றனையா? அல்லது, விஷய கதப் பிரத்தி



யக்ஷத் தன்மையின் பிரயோஜகத்தினை வினவுகின்றனையா?
முதலதில், பிரமாண சைதந்நியத்திற்கு, விஷயாவச்சிந்ந
சைதந்யத்தோடு அபேத மெனக் கூறுகின்றோம். அங்ஙன
மன்றோ, சைதந்யம், விஷய சைதந்யமும், பிரமாண சைதந்ய
மும், பிரமாத்ரு சைதந்யமும் என மூ வகைத் தாம். அவற்
றுள், கடாதி யவச்சிந்ந சைதந்யம் விஷய சைதந்ய மாம்.
அந்தக்கரண விருத்தி யவச்சிந்ந சைதந்யம் பிரமாண
சைதந்ய மாம். அந்தக்கரண யவச்சிந்ந சைதந்யம் பிரமாத்ரு
சைதந்ய மாம். ஆண்டு, எங்ஙனம் தடாக ஜலம் மதகு வாயி
லாய்ப் புறப்பட்டு வாய்க்கால் வழியாய் வயல்களை யடைந்து,
அது போன்றே நாற் கோண முதலிய ஆகாரத்தினை யடை
கின்றதோ, அங்ஙனமே, தைஜசமாய அந்தக் கரணமும்,
சக்ஷுர் முதலிய வாயிலாய்ப் புறப்பட்டுக் கடாதி விஷய
தேசத்தினை யடைந்து கடாதி விஷயாகாரமாகப் பரிணமிக்
கின்றது. அப் பரிணாமத்தினையே விருத்தி யென்று கூறப்
படுகின்றது. அநுமிதி முதலிய ஸ்தலத்திலோ அந்தக்
கரணம் வந்நி முதலிய தேசத்தினை யடைவ தின்று, வந்நி
யாதிகட்குச் சக்ஷுர் முதலியவற்றோடு ஸந்நிகர்ஷ மின்மை
யின். ஆகவே, "இது கடம்" என்ப தாதிப் பிரத்தியக்ஷ
ஸ்தலத்தில், கடாதிகளும், அதனாகார விருத்திகளும், வெளி
யில் ஓரிடத் திருத்தலால், அவ் விரண்டி னவச்சிந்ந சைதந்
யம் ஒன்றே யாம். பகுப்பதா யுள்ள அந்தக்கரண விருத்தி
களுங், கடாதி விஷயங்களும், ஓரிடத் திருத்தலாற் பேதத்
தினை யுண்டாக்காமையின்.

இதனானே, மடத்தினுள் ளிருக்கும் கடாவச்சிந்ந ஆகா
சம், மடாவச்சிந்ந ஆகாசத்தினின்றும் பேத மடைவ தின்
றாம். ஆகவே, "இது கடம்" என்னும் பிரத்தியக்ஷ ஸ்தலத்

தில், கடாகார விருத்திக்குக் கடத்தோடு சையோக மிருத்த லின் கடாவச்சிந்ந சைதந்யமும், அதன் விருத்தி யவச்சிந்ந சைதந்யமும் அபிந்ந மாகலான். ஆண்டுக், கட ஞாநத்திற்குக் கடாகார அம்ஸத்தில் பிரத்தியக்ஷத் தன்மை யிருக்கின்றது. சுக துக்காதி யவச்சிந்ந சைதந்யத்திற்கும், அதன் விருத்தி யவச்சிந்ந சைதந்யத்திற்கும், நியமமாக ஒரு விடத்தி லுள்ள உபாதி யிரண்டி னவச்சிந்நத் தன்மையான், நியமமாக, "நான் சுகி, துக்கி" என்ப தாதி ஞாநத்திற்குப் பிரத்தியக்ஷத் தன்மை யிருக்கின்றது

அற்றேல், இங்ஙனம் தன்னிடத் துள்ள சுகாதி ஸ்மரணத்திற்கும், சுகாதி அம்ஸத்தில் பிரத்தியக்ஷத் தன்மை வரும் எனின், அற் றன்று; ஆண்டு ஸ்மரிக்கப்பட்ட சுகத்திற்கு அதீதத் தன்மை யுள தாகலின். ஸ்மிருதி ரூப அந்தக்கரண விருத்திக்கு வர்த்தமாநத் தன்மை யுள தாகலின். ஆண்டு, உபாதிகட்குப் பிந்ந கால முடைய தாந் தன்மையால், அத னதனு லவச்சிந்நம் பண்ணப்பட்ட சைதந்யங்கட்குப் பேத மிருத்தலின், உபாதிகட்கு ஏக தேசத் திருத்தலோடு ஏக காலத்தி லுடையதாந் தன்மைக்கே உபதேயங்களி னபேதப் பிரயோஜக மாகலின். ஒரு தேசத் திருத்தல் மாத்திரம் உபதேபங்களி னபேதப் பிரயோஜக மெனின், அப் பொழுது, "முன் நான் சுகி" என்ப தாதி ஸ்மிருதியினிடத்து அதிவியாப்தியினை நிவாரணஞ் செய்தற்கு வர்த்தமாநத் தன்மை, விஷயத்திற்கு விசேஷணமாகக் கொடுக்குக.

அற்றேல், இங்ஙனம் தனது தர்மாதர்மங்கள் இருக்கின்றன (வென) எப் பொழுது, சப்தாதிகளால் அறியப்படு



கின்றனவோ, அப் பொழுது அவ் வித சாப்த ஞாந முதலியவற்றில் அதிவியாப்தி யாம்; ஆண்டு, தர்மாதி யவச்சிந்ந சைதந்யத்திற்கும், அதன் விருத்தி யவச்சிந்ந சைதந்யத்திற்கும், ஏகத் தன்மை யுள தாகலின் எனின், அற் றன்று; யோக்கியத் தன்மையும் விஷயத்திற்கு விசேஷண மாகலின். அந்தக்கரண தர்மத் தன்மை சமாந மாயினும், சில யோக்கியம், சில அயோக்கியம் என்னு மிடத்துப் பிரயோஜநத்தின் பலத்தால் கற்பிக்கப்பட்ட ஸ்வபாவமே சரண மாம். இங்ஙனங் கொள்ளாக்கால், நியாய மதத்திலும், ஆத்ம தர்மத் தன்மை சமாந மாயினும், சுகாதி போன்று தர்மாதிகட்கும் பிரத்தியக்ஷத் தன்மையின் ஆபத்தியினை நிவாரணஞ் செய்தற் கேலா வாம். இங்ஙன மாயினும், சுக மிருக்குங் காலத்து, "நீ சுகி" என்ப தாதி வாக்கிய ஜந்நிய ஞாநத்திற்குப் பிரத்தியக்ஷத் தன்மை யுண்டா மெனக் கூறற்க; இஷ்ட மாகலின. "பத்தாமவன் நீயா யிருக்கின்றாய்" என்ப தாதியில், ஸந்நிக்ருஷ்ட விஷயத்தின்கண் சப்தத்தாலும் அபரோக்ஷ ஞாந மங்கீகரித் திருத்தலின்.

இதனானே, "பர்வதம் வந்நி யுடைத்து" என்பதாதி ஞாநமும், வந்நி யம்ஸத்திற் பரோக்ஷ மாம். பர்வத அம்ஸத்தி லபரோக்ஷ மாம்; பர்வதாதி யவச்சிந்ந சைதந்யத்திற்கும், வெளிச் சென்ற அந்தக்கரண விருத்தி யவச்சிந்ந சைதந்யத்திற்கும், பரஸ்பரம் பேத மின்மையின். வந்நி யம்ஸத்தின்கண்ணோ, அந்தக்கரண விருத்தி வெளிப்போத லின்மையான், வந்நி யவச்சிந்ந சைதந்யத்திற்கும், பிரமாண சைதந்யத்திற்கும், பரஸ்பரம் பேத மிருத்தலின். ஆகவே, "பர்வதத்தினைப் பார்க்கின்றேன், வந்நியினை அநுமிக்கின்

றேன்'' என்னு மநுபவ முண்டாகின்றது. நியாய மதத்தில், ''பர்வதத்தினை யநுமிக்கின்றேன்'' என அநுவியவசாயம் பிராப்த மாம். ஸங்கிகிருஷ்ட மின்றிய பக்ஷத்தினை யுடைய அநுமிதியின்கண்ணே, ஸர்வாம்ஸத்திலும் ஞாநம் பரோக்ஷ மாம். ''சந்தநஞ் சுகந்த முடைத்து'' என்ப தாதி ஞாநமும், சந்தநக் கட்டை யம்ஸத்தில் அபரோக்ஷ மாம். சுகந்த அம்ஸத்தில் பரோக்ஷ மாம். சுகந்தத்திற்குச் சக்ஷு இந்திரிய அயோக்கியத்தால், கூறிய யோக்கியத் தன்மை யுடைய லக்ஷண மின்மையின்.

இங்ஙனம், ஓரே ஞாநத்தில் பரோக்ஷத் தன்மை, அப ரோக்ஷத் தன்மை யங்கிகரிக்கில், அவ் விரண்டற்கும் ஜாதித் தன்மை யின் றெனக் கூறற்க; இஷ்ட மாகலின். ஜாதித் தன்மை, உபாதித் தன்மைப் பரிபாஷைகள் சகல பிரமாணங் கட்கும் கோசர மின்மையினுல், அப் பிராமாண்ய மாகலின் (என்க). ''இது கடம்'' என்ப தாதிப் பிரத்தியக்ஷம் கடத் தன்மை முதலியன இருப்பதிற் பிரமாண மாம். அது ஜாதி யென்பதிலும (பிரமாணம்.) அன்றும். ஜாதித் தன்மை ரூப சாத்திய அப்பிரசித்தியில், அதன் சாதகமாய் அநு மாநத்திற்கும் அவகாச மின்மையின். சமவாய சித்தி யின்மையாலும், பிரஹ்மத்திற்குப் பிந்நமாய சகலப் பிர பஞ்சமும் அநித்திய மாகலானும், நித்தியத் தன்மை சம வேதத் தன்மையினை யுடைய ஜாதித் தன்மை, கடத் தன்மை முதலியவற்றிற் சித்தியாமையானும் (என் றுணர்க.) இங்ஙனமே, உபாதித் தன்மையினையுங் கண்டிக்கத் தக்க தாம். ''பர்வதம் வங்நி யுடைத்து'' என்ப தாதியில், பர்வதாம் ஸத்திலும், வங்நி யம்ஸத்திலும், அந்தக்கரண விருத்தி பேத



மங்கிகரித்தலால், அவ் வவ் விருத்தி யவச்சேதக பேதத் தான், பரோக்ஷத்வ அபரோக்ஷத்வங்கள் ஒரு சைதந்யத்தி லிருப்பதில் ஒரு விரோதமு மின்றும். ஆகவே, அவ் வவ் விந்திரிய யோக்கிய வர்த்தமாந விஷயாவச்சிந்ந சைதந்ய அபிந்நத் தன்மை, அவ் வவ் வாகார விருத்தி யவச்சிந்ந ஞாநத்திற்கு, அவ் வவ் வம்ஸத்தில் பிரத்தியக்ஷத் தன்மை யாம் (என் றுணர்க.)

இரண்டாவதில், கடாதி விஷயங்களின் பிரத்தியக்ஷத் தன்மையோ பிரமாதாவி னபிந்நத் தன்மை யாம்.

## விஷயப் பிரத்தியக்ஷத்தின் காரணம்.

அற்றேல், கடாதிகட்கு அந்தக்கரண அவச்சிந்ந சை தந்யத்தோ டபேதம் எங்ஙன மாம், ''நான் இதனைப் பார்க் கின்றேன்'' என்னும் பேதாநுபவம் விரோத மாகலின் எனின்; கூறப்படுகின்றது. பிரமாதாவி னபேத மென்பது ஐக்கிய மன்றும். பின்னையோ, பிரமாதாவின் சத்தையினும் அந்நிய சத்தையுடையதின் றென்ப தாம். ஆகவே, கடாதிகள் தன தவச்சிந்ந சைதந்யத்தில் அத்தியஸ்த மாகலான், விஷய சைதந்ய சத்தையே கடாதி சத்தை யாம். அதிஷ்டாந சத்தையினும், அந்நியமாக ஆரோபித சத்தை யங்கீகரியா மையின். விஷய சைதந்யமும், முற் புகன்ற பிரகாசம் பிர மாத்ரு சைதந்யமே யாம். ஆகலின், பிரமாத்ரு சைதந்ய மே கடாதி அதிஷ்டாந மாகலின், பிரமாத்ரு சத்தையே கடாதி சத்தை யாம். அந்நிய மன்று. ஆகலின், கடாதிகட்குப் பிரத்தியக்ஷத் தன்மை சித்த மாம். அநுமிதி முதலிய ஸ்தலத்தில், அந்தக் கரணத்திற்கு வங்நி யாதி தேசம் செல்

னுத லின்மையான், வந்நி யவச்சிந்ந சைதந்யம் பிரமாத்ரு
சைதந்ய ரூப மாகாமையின், வந்நி யாதி சத்தை பிரமாத்ரு
சத்தையினும் பிந்ந மாகலின், அதிவியாப்தி யின்றாம்.

அற்றேல், இங்ஙன மாயினும், தர்மாதர்மாதிகளைக்
கோசரிக்கு மநுமிதி முதலிய ஸ்தலத்தில், தர்மாதர்மங்கட்
குப் பிரத்தியக்ஷத் தன்மைப் பிராப்த மாம், தர்மாதி யவச்
சிந்ந சைதந்யத்திற்குப் பிரமாத்ரு சைதந்ய அபிந்நத்தால்,
தர்மாதி சத்தைக்குப் பிரமாத்ரு சத்தையினும் அந்நிய
மின்மையா னெனின், அற் றன்று; யோக்கியத் தன்மையும்
விஷய விசேஷண மாகலின்.

அற்றேல், இங்ஙன மாயினும், "ரூப முடையது கடம்"
என்னும் பிரத்தியக்ஷ ஸ்தலத்தில், கடத்தின்கண் ணுள்ள
பரிமாணாதிகட்குப் பிரத்தியக்ஷத் தன்மை வரும், ரூபாவச்
சிந்ந சைதந்யத்திற்கும், பரிமாணாதி யவச்சிந்ந சைதந்யத்
திற்கும், ஒன்றாந் தன்மையால், ரூபாவச்சிந்ந சைதந்யத்திற்
குப் பிரமாத்ரு சைதந்ய அபேதத்தில், பரிமாணாதி யவச்
சிந்ந சைதந்யத்திற்கும், பிரமாத்ரு அபிந்நத்தால், பரிமா
ணாதி சத்தைக்குப் பிரமாத்ரு சத்தை அந்நியத் தன்மை
யின்மையின் எனின், அற் றன்று, அவ் வவ் வாகார விருத்தி
யுபகிதத் தன்மையும், பிரமாத்ரு விசேஷண மாகலின். ரூபா
கார விருத்தி காலத்திற் பரிமாணாதி யாகார விருத்தி யின்
மையின். பரிமாணாதி யாகார விருத்தி யுபகித பிரமாத்ரு
சைதந்ய அபிந்ந சத்தை யுடையதாந் தன்மை யின்மையின்,
அதிவியாப்தி யின்மையான் (என்க).



அற்றேல், இங்ஙன மாயினும், விருத்தியில் அவ்
வியாப்தி யாம், அநவஸ்தா பயத்தால், விருத்தியினைக் கோச
ரிக்கும் வேறு விருத்தி அங்கீகரிக்காமையின், ஆண்டு, ஸ்வா
கார விருத்தி யுபகிதத் தன்மையோடு கூடிய முற் புகன்ற
இலக்ஷண மின்மையின் எனின், அற் றன்று; அநவஸ்தா
பயத்தால், விருத்திக்கு வேறு விருத்தியின் விஷயத் தன்மை
யில்லாவிடினும், தனது விஷயத் தன்மையை யங்கீகரித்த
லால், ஸ்வ விஷய விருத்தி யுபகித பிரமாத்ரு சைதந்ய
சத்தையின் அபிந்ந சத்தை யுடையதாந் தன்மை ஆண்டும்
பொருந்துதலின். இங்ஙனமே, அந்தக்காண, அதன் தர்மாதி
கட்குக் கேவல சாக்ஷி வேத்தியத் தன்மை யிருப்பினும்,
அவ் வவ் வாகார விருத்தியை யங்கீகரித்தலால் கூறிய
லக்ஷண மாண்டு மிருத்தலின், அவ்வியாப்தி யின்றாம்.

அந்தக்கரண, அதன் தர்மாதிகட்கு விருத்தி விஷயத்
தன்மை யங்கீகரிக்கில், கேவல சாக்ஷி வேத்தியத் தன்மை
யங்கீகார விரோதமா மெனக் கூறற்க, விருத்தி யின்றிச்
சாக்ஷிக்கு விஷய மாதல், கேவல சாக்ஷி வேத்தியத் தன்மை
யன்றாம். பின்னையோ, இந்திரிய அநுமாநாதிப் பிரமாண
வியாபார மின்றிச் சாக்ஷி விஷயத் தன்மை யாம். இதனா
னே, (பத்ம பாதாசாரிய ரியற்றிய பிரஹ்ம சூத்திர பாஷிய
வியாக்கியாந மாகிய பஞ்ச பாதிகையில், அஹங்கார நிரூபண
ஸ்தலத்தின் மீதுள்ள விவரணத்தில்), அஹங்கார டீகையில்,
ஆசார்யர்களால், அக மாகார அந்தக்கரண விருத்தி யங்கீகரிக்
கப்பட்டிருக்கிறது. இதனானே, பிராதிபாசிக ரஜத ஸ்தலத்
தில், ரஜதாகார அவித்யா விருத்தி சம்பிரதாய முணர்ந்தோ
ரால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஆகவே, கேவல

சாக்ஷி வேத்திய மாகிய அந்தக்கரண, அதன் தர்மாதிகளில், விருத்தி யுபகிதத் தன்மையோடு கூடிய லக்ஷண மிருத்தலால், அவ்வியாப்தி யின்றும்.

ஸ்வாகார விருத்தி யுபகித பிரமாத்ரு சைதந்ய சத்தையினும், அந்நிய சத்தை யுடைய தின்மையோடு யோக்கியத் தன்மை, விஷயத்தின் பிரத்தியக்ஷத் தன்மை யாம் என்னும் இது துணி வான பொரு ளாம்.

ஆண்டு, சையோகம், சையுக்த தாதாத்மியம் முதலிய ஸந்நிகர்ஷங்கட்குச் சைதந்யத்தினை யபிவியஞ்சகஞ் செய்யும் விருத்தியினை யுண்டாக்குவதில் விநியோக மாம். அவ் விருத்தியும், சம்சயம், நிச்சயம், கர்வம், ஸ்மரணம் என நால்வகைத் தாம். இங்ஙன மாயின், விருத்தி பேதத்தினால், ஒரு அந்தக்கரணமும், மந மென்றும், புத்தி யென்றும், அஹங்கார மென்றும், சித்த மென்றும், கூறப்படுகின்றது. அது, "மநம், புத்தி, அகங்காரம், சித்தம் (என்பன) அந்தக்கரண மாம். சம்சயம், நிச்சயம், கர்வம், ஸ்மரணம் (என்னும்) இவை (அவற்றின்) விஷயங்க ளாம்" எனக் கூறப்பட்டிருக்கின்றது.

அந்தப் பிரத்தியக்ஷமும், சவிகல்பகம், நிருவிகல்பகம் என்னும் பேதத்தால் இரு வகைத் தாம். அவற்றுள், வைசிட்டியத்தினைக் கிரகிக்கு ஞானம் சவிகல்பக மாம். அது, "கடத்தினை நான் அறிகின்றேன்" என்ப தாதி ஞானம் போலு மாம். நிருவிகல்பகமோ, ஸம்சர்க்கத்தினைக் கிரகிக்காத ஞான மாம். அது, "சோயந் தேவதத்தன்", "தத் துவ மசி" என்ப தாதி வாக்கிய ஜந்நிய ஞானம் போலு மாம்.



அற்றேல், இந்த ஞானம் சாப்த மாம். பிரத்தியக்ஷ மன்றும், இந்திரிய ஜந்நிய மன்றாகலின் எனின், அற்றன்று; இந்திரிய ஜந்நியத் தன்மை, பிரத்தியக்ஷத் தன்மையிற் பிரயோஜக மன்று, தூஷிக்கப்பட்டிருத்தலின். பின்னையோ, யோக்கிய வர்த்தமாந விஷயத்தை யுடைய தன்மையோடு கூடிய, பிரமாண சைதந்நியத்திற்கு விஷய சைதந்யத்தோடு, அபிந்நத் தன்மை யெனக் கூறப்பட்டிருக்கின்றது. ஆகவே, "சோயந் தேவதத்தன்" என்னும் வாக்கிய ஜந்நிய ஞானத்திற்குச் சந்நிகிருஷ்ட விஷயத்தால், வெளிச் சென்ற அந்தக்கரண விருத்தி யங்கீகரித்தலால், தேவதத்தாவச்சிந்ந சைதந்யத்திற்கு, விருத்தி யவச்சிந்ந சைதந்யத்தோடு அபேதத்தால், "சோயந் தேவதத்தன்" என்னும் வாக்கிய ஜந்நிய ஞானத்திற்குப் பிரத்தியக்ஷத் தன்மை யாம். இங்ஙனமே, "தத் துவ மசி" என்ப தாதி வாக்கிய ஜந்நிய ஞானத்திற்கு மாம். ஆண்டுப், பிரமாதாவே விஷய மாகையால், அவ் விரண்டன் அபேத மிருத்தலின்.

அற்றேல், வாக்கிய ஜந்நிய ஞானத்திற்குப் பதார்த்தங்களின் ஸம்ஸர்க்கத்தினைக் கிரகிக்குந் தன்மை யாகலின், நிருவிகல்பகத் தன்மை யாங்ஙனம் (எனின்) கூறப்படுகின்றது. வாக்கிய ஜந்நிய ஞான விஷயத் தன்மையில், பதார்த்த ஸம்ஸர்க்கத் தன்மை பிரயோஜக மன்றும். அங்கீகார மின்றிய ஸம்ஸர்க்கத்திற்கும், வாக்கிய ஜந்நிய ஞான விஷயத் தன்மை வருதலின், பின்னையோ, தாற்பரிய விஷயத் தன்மை யாம். பிரகிருதத்திலும், "ஹே! சௌமிய சிருட்டிக்குப் பூர்வம் இவ் வெல்லாம் சத்தாகவே யிருந்தன" என உபக்கிரமித்து, "ஹே சுவேதகேதுவே! அது சத்தி

யம், அஃதாத்மா, தத் துவ மஸி" என்னும் உபசம்ஹாரத்தி
னால், சுத்தப் பிரஹ்மத்தின்கண் வேதாந்தங்களின் தாற்
பரியம் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றதாகலின். தாற்பரிய
விஷய மின்றிய சம்சர்க்கத்தினை யெங்ஙனம் போதிக்கும்.
எது சம்சர்க்கத்தினைக் கிரகிக்காது, எதார்த்த ஞானத்தினை
யுண்டுபண்ணுந் தன்மை (யோ) இதுவே, தத் துவ மஸி
முதலிய வாக்கியங்கட்கு அகண்டார்த்தத் தன்மை யாம்.
அது, "இந்த வாக்கியங்கட்குச் சம்பந்தத்தினை விஷயமாக்
காத நன் ஞானத்தை யுண்டாக்குந் தன்மை, கூறிய அகண்
டார்த்தத் தன்மை யாம். அல்லது, அது பிராதிபதிகார்த்
தத் தன்மை யாம்" என்று கூறப்பட்டிருக்கின்றது. பிராதி
பதிகார்த்த மாத்திர பரத் தன்மை, அகண்டார்த்தத் தன்மை
யென்பது நான்காவது பாதத்தின் பொருளாம்.

அந்தப் பிரத்தியக்ஷம் மீண்டும், ஜீவ சாக்ஷியும், ஈசுவர
சாக்ஷியும் என இரு வகைத் தாம்.

### ஜீவ சாக்ஷி பிரத்தியக்ஷம்.

அவற்றுள், அந்தக்கரண அவச்சின்ன சைதந்யம் ஜீவ
னாம். அதன் சாக்ஷி அந்தக்கரண உபகித சைதந்ய மாம்.
அந்தக் கரணத்தினது விசேஷணத் தன்மை, உபாதித்
தன்மைகளால் இரண்டற்கும் பேத மாம். காரியத்தில்
அந்வயித்து வியாவர்த்தகஞ் செய்வது விசேஷண மாம்.
காரியத்தில் அந்வய மின்றி வியாவர்த்தகமாய் வர்த்தமான
காலத்தி லுளதாவது உபாதி யாம். எங்ஙனம், "ரூப
விசிஷ்ட கடம் அநித்தியம்" என்னுமிடத்து ரூபம் விசே



ஷண மாம். "கர்ண சஷ்குலி யவச்சின்ன ஆகாயம் சுரோத்
திரம்" என்னு மிடத்துக் கர்ண சஷ்குலி உபாதி யாம.
இவ் வுபாதியே நையாயிகர்களால் பரிசாயகம் என்று
கூறப்படுகின்றது. பிரகிருதத்திலும், அந்தக் கரணம் ஜட
மாகலின், விஷய பாசகத் தன்மை பொருந்தாமையின்,
விஷயத்தினை விளக்குஞ் சைதந்யத்திற்கு உபாதித் தன்மை
யாம். இந்தச் சீவ சாக்ஷியும், ஒவ்வொரு ஆத்மாவிற்கும்
வெவ்வேறாம். ஏகத் தன்மையில், சைத்திரனா லறியப்
பட்டதில், மைத்திரனுக்கும் அநுசந்தானப் பிரசங்கம்
வரும்.

### ஈசுவர சாக்ஷி பிரத்தியக்ஷம்.

ஈசுவர சாக்ஷியோ மாயா வுபகித சைதந்ய மாம். அது
வும் ஏக மாம்; அத னுபாதி ரூப மாயை ஒன்றாகலின்.
"பரமேசுவரன் மாயைகளால் அநேக ரூபமாக விளங்கு
கின்றான்" என்பதாதி சுருதியில், 'மாயைகளால்' என்னும்
பன்மை வசனத்திற்கு, மாயையின்கண் ணுள்ள சக்தி விசேஷ
அபிப்பிராயத்தினாலும், மாயையின்கண் ணுள்ள சத்துவ
ரஜஸ் தமோ ரூப குண அபிப்பிராயத்தினாலும் பொருந்து
தலின். "மாயையைப் பிரகிருதி யென மதிக்க, மஹேசனை
மாயி என மதிக்க", "யோகியானவன் இருதயத்தில் எது
இருக்கில் விஸ்தாரமான மாயையாகிய அவித்தையைக் கடக்
கின்றனரோ, அந்த மேய மின்றிய வித்யாத்மாவிற்கு நமஸ்
காரம்", "லோகித சுக்ல கிருஷ்ணத்தினை யுடையதாயும்,
சமான ரூப அநேக பிரஜைகளைச் சிருஷ்டிப்பதாயும், உள்ள
ஒரு அஜையை, ஒரு அஜன் சேவிப்பவனாய், அநுசரிக்

கின்றான். இந்தப் புஜிக்கப்பட்ட போகத்தினை அந்நியனான அஜன் விடுகின்றான்'' என்பன வாதி சுருதிகளில் உள்ள ஏக வசன பலத்தினாலும், லாகவ அநுக்கிரகத்தினாலும், மாயைக்கு ஏகத் தன்மை நிச்சயிக்கப்படுகின்றது. அதனாலும், அதனுபகித சைதந்யம் ஈசுவர சாக்ஷி யாம். அதுவும் அநாதி யாம்; அதனுபாதியான மாயை அநாதியாகலின். மாயாவச்சிந்ந சைதந்நியம் பரமேசுவரனாம். மாயைக்கு விசேஷணத் தன்மையில், ஈசுவரத் தன்மை யாம். உபாதித் தன்மையில், சாக்ஷித் தன்மை யாம். ஆகலின், ஈசுவரத்வ சாக்ஷித்வங்களின் பேத மாம். தர்மி யாகிய ஈசுவர சாக்ஷிகட்குப் பேத மின்றாம். அந்தப் பரமேசுவரன் ஒருவனாயினும், தனது உபாதி ரூப மாயையின்கண்ணுள்ள சத்வ ரஜஸ் தமோ குண பேதத்தினால், பிரஹ்மா விஷ்ணு மஹேசுவராதி சப்த வாச்சியத் தன்மையினை யடைகின்றான்.

அற்றேல், ஈசுவர சாக்ஷிக்கு அநாதித் தன்மையில், "அஃதெல்லாப் பிரஜைகளு மாவோம்" என்ப தாதியால், சிருஷ்டியின் பூர்வ சமயத்தில், பரமேசுவரனுக்கு ஆகந்துக வீக்ஷணங் கூறுவது எங்ஙனம்? பொருந்தும் (எனின்). கூறப்படுகின்றது. எங்ஙனம்? விஷயேந்திரிய ஸந்நிகர்ஷ முதலிய காரண வசத்தால், ஜீவோபாதியாய அந்தக்கரணத்திற்கு விருத்தி பேதங்களுண்டாகின்றனவோ, அங்ஙனமே சிருஷ்டிக்கப்படும் பிராணிகளின் கர்ம வசத்தினாலே, பரமேசுவர உபாதி ரூப மாயைக்கு, 'இஃது இப்பொழுது சிருஷ்டிக்கத் தக்கது, இஃது இப்பொழுது பாலிக்கத் தக்கது, இஃது இப்பொழுது சம்மரிக்கத் தக்கது'' என்னு மாகாரமான விருத்தி விசேஷங்களுண்டாகின்றன. அவ் விருத்தி



கட்குச் சாதித் தன்மை யிருத்தலின், அதிற் பிரதிபிம்பித்த சைதந்யமும் சாதி யென்று கூறப்படுகின்றது. இங்ஙனம், சாக்ஷி இரு விதத்தால், பிரத்தியக்ஷ ஞானமும் இரு விதமாம். பிரத்தியக்ஷத் தன்மையும், ஞேய கதமும், ஞப்தி கதமும் (என்னு மிரண்டும்) நிரூபிக்கப்பட்டன. அவற்றுள், ஞப்திகதப் பிரத்தியக்ஷத் தன்மைக்குச் சாமாந்ய இலக்ஷணம், சித்துத் தன்மையே யாம். "பர்வதம் வந்நி யுடைத்து" என்ப தாதிகளிலும், வந்நி யாதியாகார விருத்தி யுபகித சைதந்யத்திற்குத் தனது ஸ்வரூபாம்ஸத்தில் ஸ்வப்ரகாசத்தால் பிரத்தியக்ஷத் தன்மை யாகலின். அவ்வவ் விஷயாம்ஸத்திற் பிரத்தியக்ஷத் தன்மையோ, முற் புகன்றதே யாம். அதற்குப் பிராந்தி ரூபப் பிரத்தியக்ஷத்தி லதிவியாப்தி யின்றாம். பிரமப் பிரமைகளின் சாதாரணப் பிரத்தியக்ஷத் தன்மைச் சாமாந்ய நிர்வசநத்தினால், அதற்கும் லக்ஷியத் தன்மை யிருத்தலின் பிரத்தியக்ஷப் பிரமைக்கே லக்ஷணங் கூற வேண்டு மாயின், அப் பொழுது முற் புகன்ற லக்ஷணத்தில் பாதிக்கப்படாத் தன்மை யென விஷய விசேஷணங் கொடுக்குக. சுக்தி ரூப்யாதி பிராந்திக்குச் சம்சார காலீந பாத விஷயப் பிராதிபாசிக ரஜதாதி விஷய முடைத்தாந் தன்மையால், புகன்ற லக்ஷண மின்மையின் அதிவியாப்தி யின்றாம்.

அற்றேல், விஸம்வாதிப் பிரவிர்த்தியினால் பிராந்தி ஞானஞ் சித்திக்கு மாயினும், அதற்குப் பிராதிபாசிகமாய் அக் காலத்தி லுண்டான இரஜதாதி விஷய முடைத்தாந் தன்மையில் பிராமாண்ய மின்றாம், தேசாந்தரத்தி லுள்ள, நிச்சயிக்கப்பட்ட ரஜதத்திற்கே அதன் விஷயத் தன்மை

சம்பவித்தலின், (எனின்) அற் றன்று; அதற்குச் சந்நிகர்ஷ
மின்மையால், பிரத்தியக்ஷ விஷயத் தன்மை பொருந்தாமை
யின். ஆண்டு ஞாநம் பிரத்தியாசத்தி (சம்பந்தம்) என்னற்க,
ஞாநத்திற்குப் பிரத்தியாசத்தித் தன்மையில், அதனானே
யே வந்நி முதலியவற்றிற்குப் பிரத்தியக்ஷத் தன்மை வருங்
கால், அநுமாந முதலியவற்றிற்கு உச்சேதம் வருதலின்.

அற்றேல், இரஜதத்தினை யுண்டாக்கும் இரஜத அவய
வாதிக ளின்மையின், சுத்தியின்கண் உனக்கும் இரஜதம்
எங்ஙனம் உண்டாகின்ற தெனின், கூறப்படுகின்றது;
லோகத்திற் சித்தித் துள்ள சாமக்கிரியானது, பிராதிபாசிக
இரஜதத்தினை யுண்டாக்குவ தின்று; பின்னேயோ, விலக்ஷண
மேயாம். அங்ஙன மன்றே, காச முதலிய தோஷத்தி
னற் றூஷிக்கப்பட்ட நேத்திரத்திற்கு, முன்ன ரிருக்கும்
திரவிய சம்யோகத்தால், இதமாகார, சாகசிக்யாகாரமாய்ச்
சில அந்தக் கரண விருத்தி யுண்டாகின்றது. அவ் விருத்தி
யில், இத மவச்சிந்ந சைதந்யம் பிரதிபிம்பிக்கின்றது. ஆண்டு
முற் புகன்ற ரீதியால் விருத்தி வெளிச் செல்லுதலின், இத
மவச்சிந்ந சைதந்யமும், விருத்தி யவச்சிந்ந சைதந்யமும்,
பிரமாத்ரு சைதந்யமு மபிந்நமாகின்றது. அதனாலும், பிர
மாத்ரு சைதந்ய அபிந்நமாய விஷய சைதந்யத்தி லுள்ள,
சுத்தித் தன்மைப் பிரகாரத்தினை யுடைய, சாகசிக்ய முதலிய
சாதிருசிய தெரிசநத்தால், நனகு உண்டாய இரஜத சம்ஸ்
காரத்தோடும், காசாதி தோஷத்தோடும் கூடிய அவித்தை,
ரஜத ரூப அர்த்தாகாரத்தினாலும், ரஜத ஞாந ஆபாசாகாரத்
தினாலும் பரிணமிக்கின்றது. பரிணாமம், உபாதாநத்தின்
சம சத்தை யுடைய காரியோற்பத்தி யாம். விவர்த்தம்



உபாதாநத்தின் விஷம சத்தை யுடைய காரியோற்பத்தி
யாம். பிராதிபாசிகமாய ரஜதமும், அவித்தையின் அபே
க்ஷையாற் பரிணாம மென்றும், சைதந்யத்தி னபேக்ஷையால்
விவர்த்த மென்றுங் கூறப்படுகின்றது. அவித்தையின்
பரிணாம ரூபமாய அந்த ரஜதமும், அவித்தையி னதிஷ்டாந
மான இத மவச்சிந்ந சைதந்யத்தி லிருக்கின்றது. நமது
மதத்தில் எல்லாக் காரியத்திற்கும் தன துபாதாந அவித்
தையின் அதிஷ்டாந ஆசிரிதத் தன்மை நியம மாகலின்.

அற்றேல், சைதந்யத்தின்கண் ணுள்ள ரஜதத்திற்கு,
"இது ரஜதம்" என முன் னிருப்பதோடு தாதாத்மியம்
யாங்ஙனம் (எனின்,) கூறப்படுகின்றது. எங்ஙனம் நியாய
மதத்தில் ஆத்மாவின்கண ணுள்ள சுகாதிகட்குச் சரீரத்தி
விருத்தற் றன்மையினல் உபலம்பம ஆகின்றது. சரீரத்
திற்குச் சுகாதி யதிகரணத்தி னவச்சேதகத் தன்மையான்.
அங்ஙனமே, சைதந்ய மாத்திரத்திற்கு ரஜதத்தினைக
குறித்து அதிஷ்டாநத் தன்மை யின்மையால், இத மவச்சிந்ந
சைதந்யத்திற்கு அத னதிஷ்டாநத் தன்மை யிருத்தலின,
இத மானது அவச்சேதக மாதலின், ரஜதத்திற்கு முன்
னிருப்பதனோடு சம்பந்த ஞாநம் பொருந்துகின்றது. அந்த
விஷய சைதந்யத்திற்கும், அந்த அந்தக்கரண உபகித சைதந்
யத்தோ டபிந்நமாகின்றமையின், விஷய சைதந்யத்தின்
கண் அத்தியஸ்த ரஜதமும், சாக்ஷியினிடத்தில் அத்தியஸ்த
மென்றும், கேவல சாக்ஷி வேத்திய மென்றும், சுகாதி
போன்று அந்நிய வேத்திய மன் றென்றும், கூறப்படு
கின்றது.

அற்றேல், சாக்ஷியின்கண் அத்தியஸ்தத் தன்மையில், ''நான் ரஜதம்'' என ஞாந முண்டாம். ''நான் சுகி'' என்பது போ லெனின், கூறப்படுகின்றது; சுகாதிகட்கு அந்தக் கரண அவச்சிந்ந சைதந்யத்தின்கண் ணுள்ள அவித்தையின் காரியத் தன்மைப் பிரயோஜ்ஜிபமாய், ''நான் சுகி'' என்னும் ஞாநம் (உண்டாவது) இல்லே, சுகாதிகள், கடாதி போன்று சுத்த சைதந்யத்தின்கண்ணே அத்தியஸ்த மாகலின். பின்னரோ, எதற்கு எவ் வாகார அநுபவ ஸகித சமஸ்காரத்தோடு கூடிய அவித்தையின் காரியத் தன்மை யிருக்கின்றதோ, அதற்கு அவ் வாகார அநுபவ விஷயத தன்மை யாம் என்பதே அநுகத நியாமக மாம். ஆகவே, இத மாகார அநுபவத்தா லுண்டாய சமஸ்காரத் தோடு கூடிய அவித்தையின் காரியத் தன்மை யிருத்தலின், கடாதிகட்கு இத மாகார அநுபவ விஷபத் தன்மை யாம். அக மாகார அநுபவத்தா லுண்டாய சமஸ்காரத்தோடு கூடிய அவித்தையின் காரியத் தன்மை யிருத்தலின், அந்தக் கரணுதிகட்கு அகம் (ஆகார) அநுபவ விஷபத் தன்மை யாம். சரீரேந்திரியாதிகட்கு, இரு வித அநுபவத்தினு லுண்டாய சமஸ்காரத்தோடு கூடிய அவித்தையின் காரியத் தன்மை யுளதா மாகலின், இரு வித அநுபவ விஷயத் தன்மை யாம். ஆகவே, ''இது சரீரம், நான் தேகம், நான் மநுஷ்யன், நான் பிராஹ்மணன், இது சக்ஷு, நான் ஒற்றைக் கண்ணன், இது சுரோத்திரம், நான் செவிடன்'' என இரு வித அநுபவ மாம். பிரகிருதத்திலும், பிராதிபாசிக ரஜதத் திற்குப் பிரமாத்ரு சைதந்யாபிந்ந இத மவச்சிந்ந சைதந்யத் தின்கண் ணுள்ள அவித்தையின் காரியத் தன்மை யாயி



னும், ''இது ரஜதம்'' எனச் சத்திய ஸ்தலத்தி லுள்ள, இத மாகார அநுபவத்தினு லுண்டாய சமஸ்கார ஜந்நிய மாகலின், இத மாகார அநுபவ விஷயத் தன்மை யாம். ''நான் ரஜதம்'' என அக மாகார அநுபவ விஷயத் தன்மை இன்றும் என றுணர்க.

அற்றேல், இங்ஙனமா மாயினும், மித்தையா ரஜதத் திற்குச் சாக்ஷாத் சாக்ஷி சபந்தத்தாற் பாநம் பொருந்து மிடத்து, ரஜதத்தினைக் கோசரிக்கும் ஞாந ஆபாச ரூப அவித்யா விருத்தியின் அங்கீகாரம் எதன் பொருட் டெனின், கூறப்படுகின்றது; ஸ்வ கோசர விருத்தி யுபகித சைதந்யத்தின் பிந்ந சத்தை யுடையதாந் தன்மை யின் மைக்கு, விஷய அபரோக்ஷ ரூப மாகலின். ரஜதத்திற்கு அபரோக்ஷத் தன்மை சித்தித்தற் பொருட்டு அது அங்கீ கரித்தலின்.

அற்றேல், இதம் விருத்திக்கும், ரஜதாகார விருத்திக் கும், ஒன் றென்றற்கும், ஒவ் வொன்று விஷயமாந் தன்மை யில், குரு மதம் போன்று விசிஷ்ட ஞாநத்தினை யங்கீகரிக்கா விடின், பிராந்தி ஞாந சித்தி யாங்ஙன மெனின்; அற் றன்று; விருத்தி யிரண்டிலும் பிரதிபிம்பித் திருக்கும் ஒரு சைதந்யத்திற்குச் சத்திய மித்யா வஸ்துக்களின் தாதாத் மியத்தினைக் கிரகிக்குந் தன்மையால், பிராந்தித் தன்மை ஸ்வீகரித்தலின். இதனுனே சாக்ஷி ஞாநத்திற்குச் சத்திய அசத்திய விஷயத் தன்மையால், பிராமாண்ய நியம மின்மை யின், அப் பிராமாண்ய மாம் என்னும் சம்பிரதாய முணர்ந் தோரது வசநமும் பொருந்துகின்றது.

அற்றேல், சித்தாந்தத்தில் தேசாந்தரத்தி லுள்ள ரஜதமும், அவித்யா காரியமும், அத்தியஸ்தமு மாம். ஆகலின், சுக்தியின்கண் ணுள்ள வெள்ளிக்கு அதனின் வைலக்ஷண்யம் யாங்ஙன மெனின், அற் றன்று, உன் பதத்தில் சத்தியத் தன்மைச் சமாநமா மாயினும், சிலவற்றிற்கு க்ஷணிகத் தன்மையும், சிலவற்றிற்குத் திரத் தன்மையும், என்னு மிடத்து எது நியாமகமாமோ, அந்த ஸ்வபாவ விசேஷாதிகளே எமக்கு மாம். அல்லது, சடாதி யத்தியாசத்தில், அவித்தையே தோஷத் தன்மையால் எது வாம் சுக்தி ரூப்பிய அத்தியாசத்திலோ, காசாதிகளும் தோஷங்களாம். ஆகவே, ஆகந்துக தோஷ ஜந்நியத தன்மை, பிராதிபாசிகத் தன்மையிற் பிரயோஜக மாம். இதனானே ஸ்வப்நத்தில் தோற்றும் ரத முதலியவற்றிற்கு, ஆகந்துக நித்திரா தோஷ ஜந்நியத் தன்மை யிருத்தலின் பிராதிபாசிகத் தன்மை யாம்.

அற்றேல், ஸ்வப்ந ஸ்தலத்தில், பூர்வ மநுபவிக்கப்பட்ட ரதாதிகளின் ஸ்மரண மாத்திரத்தானேயே விடவகாரம் பொருந்துங்கால், ரதாதி சிருஷ்டி கல்பந மின்றாம், கௌரவத்தா னெனின், அற் றன்று; ரதாதிகட்கு ஸ்மிருதி மாத்திர மங்கீகரிக்கின், "ரதத்தினைப் பார்க்கின்றேன், ஸ்வப்நத்தில் ரதத்தினைப் பார்த்தேன்" என்ப தாதி அநுபவ விரோதம் வருதலானும், "அநந்தாம் ரதங்களையும், அசுவங்களையும், மார்க்கங்களையும் சிருஷ்டிக்கின்றான்" என்ப தாதி சிருஷ்டியினைப் பிரதிபாதிக்குஞ் சுருதி விரோதம் வருதலானும் (என்க.) ஆகலின், சுக்தி ரூப்யம் போன்று,




ஸ்வப்நத்திற் றோன்றும் ரதாதிகளும் பிராதிபாசிகங்களே யாம். எது வரை விளக்க மிருக்கின்றனவோ, (அது வரை யிருக்கின்றன வாம்.)

அற்றேல், ஸ்வப்ந ரதாதிகளி னதிஷ்டாநத் தன்மை யால் தோற்றும், தேச விசேஷத்திற்கும் அப்பொழுது ஸந்நிகர்ஷ மின்மையின், அநிர்வசநீயமாகப் பிராதிபாசிக தேச மங்கீகரிக்க. ஆகவே, யாண்டு அத்தியஸ்த மெனின், அற் றன்று; ஸவயம்பிரகாச சைதந்யத்திற்கு ரதாதிகளின் அதிஷ்டாநத் தன்மை யிருத்தலின், பிரதீதியாகும் ரதாதிகள் "இருக்கிறது" என்றே பிரதீதியாகின்றமையின், சத் ரூபமாக விளங்குஞ் சைதந்யமே அதிஷ்டாந மாம். தேச விசேஷமும் சித்தின்கண் அத்தியஸ்த மாம். (அதுவும்.) பிராதிபாசிக மாம். ரதாதிகளில் இந்திரியத்தினாற் கிரகிக் கப்படுந் தன்மையும் பிராதிபாசிக மாம், அப் பொழுது சர்வேந்திரியமும் உபரம மாகலின். "நான் யானை" என்னும் பிரதீதியின் ஆபாதநமோ, முன்னர்ப் போன்றே நிவர்த்திக்க. ஸ்வப்ந சம்பந்தமான யானை முதலியன சாக்ஷாத் மாயையின் பரிணாமங்க ளெனச் சிலர் கூறுகின் றனர். அந்தக் கரண வாயிலாய் அதன் பரிணாமங்க ளாம் என வேறு சிலர் கூறுகின்றனர்.

அற்றேல், கஜ முதலியவற்றிற்குச் சுத்த சைதந்ய அத்தியஸ்தத் தன்மையில், இப்பொழுது அதிஷ்டாந சாக்ஷாத் கார மின்மையின், விழிப்பினும் ஸ்வப்நத்திற் றோற்றிய கஜாதிகள் அநுவர்த்திக்குக (எனின்), கூறப்படுகின்றது; காரிய விநாசம் இரு வகைத் தாம். சில விடத்து உபா



தானத்தொடு கூடவும், சில விடத்து உபாதான மிருக்குங் காலத்தே எனவு மாம். முதலது பாத மாம். இரண்டாவது நிவிர்த்தி யாம். முதலதன் காரணம் அதிஷ்டானத்தின் தத்துவ சாக்ஷாத்கார மாம், அஃதின்றி உபாதான ரூப அவித்தையி னிவிர்த்தி யின்மையின். இரண்டாவதில், விரோதி விருத்தி யுற்பத்தியும், தோஷ நிவிர்த்தியு (ங் காரணமா) ம். ஆகலான், ஈண்டுப் பிரஹ்ம சாக்ஷாத்கார மின்மையின், ஸ்வப்ந சம்பந்தமாய பிரபஞ்சம் பாதிக்கப்படா திருக்குக. உலக்கையா லடித்தலால் கடாதிகட்கு (நாச முண்டாவது) போன்று, விரோதி வேறு ஞான முண்டாவதனால், அல்லது, தனக்குக் காரணமான நித்திராதி தோஷ நாசத்தினால், சஜ முதலியவற்றி னிவிர்த்தியில் விரோதம் யா துள தாம்? இங்ஙனமே, சுக்தி ரூப்பியத்திற்குச் சுக்தி யவச்சிந்ந சைதந்யத்தின்கண் ணுள்ள தூலாவித்தையின் காரியத் தன்மைப் பக்ஷத்தில், "சுக்தி" என்னு ஞானத்தினால், அத னஞ்ஞானத்துடன் கூட ரஜதத்தினுக்குப் பாத மாம். மூலாவித்தையின் காரியத் தன்மைப் பக்ஷத்திலோ, மூலாவித்தைக்குப் பிரஹ்ம சாக்ஷாத்கார மாத்திரத்தினால் நிவிர்த்தியாந் தன்மை யுண்மையின், சுக்தித் தன்மையின் ஞானத்தினால நிவிர்த்தி யாகாமையின், ஆண்டுச் சுக்தி ஞானத்தான் உலக்கையா லடித்தலால் கடத்திற்கு (நாச முண்டாவது) போன்று நிவிர்த்தி மாத்திர மாம்.

அற்றேல், சுக்தியின்கண் ரஜதத்திற்குத் தோன்றுஞ் சமயத்தில், பிராதிபாசிக சத்தையை யங்கீகரிக்கில், "இது ரஜத மன்று" எனத் திரைகாலிக நிஷேத ஞான முண்டாகாது; பின்னரோ, "இப் பொழுது இது ரஜத மன்று"



என, "இப் பொழுது கடம் கறுப் பன்று" என்பது போன்று (உண்டாகும்) எனின், அற் றன்று; ஆண்டு, ரஜதத்வ அவச்சிந்நத்தைப் பிரதியோகியாக வுடைய அபாவமானது நிஷேத புத்தியின் விஷய மன்றும், பின்னரோ, லௌகீக பாரமார்த்திகத்வாவச்சிந்நப் பிராதிபாசிக ரஜதத்தினைப் பிரதியோகியாக வுடைய (அபாவம் நிஷேத புத்திக்கு விஷய மாம்.) (உலக வுண்மைத் தன்மையினால் வரைந்து கொள்ளப்படும் தோற்ற மாத்திர வெள்ளியினை எதிர்மறையாக வுடைய இன்மை யென மொழி பெயர்த்துரைத்துக் கொள்க.) வெதிகரண தர்மாவச்சிந்நப் பிரதியோகியினை யுடைய அபாவம் அங்கீகரித் திருத்தலின். (வேற்று நிலைக் களத் தன்மத்தால் வரைந்து கொள்ளப்படும் எதிர்மறையினை யுடைய இன்மை கொண்டிருத்தலினெனப் பெயர்த் துரைக்க.)



அற்றேல், பிராதிபாசிக ரஜதத்தில், பாரமார்த்திகத் தன்மை யுணரப்பட்டதா? இன்று? உணரா திருக்குங்கால், பிரதியோகித் தன்மை யவச்சேதகத்தி னவச்சிந்ந ஞான மின்மையின், அபாவப் பிரத்தியக்ஷம் பொருந்தா தாம். உணர்ந் திருக்குங்கால், அபரோக்ஷ விளக்கத்திற்கு, அக்காலத்தி லுள்ள விஷய சத்தை நியத மாகலின், ரஜதத்தினிடைப் பாரமார்த்திகத் தன்மையும், ரஜதம் போன்றே அநிர்வசநீயமாக உற்பந்ந மாம். (எனக் கோடி.) ஆகலின், அதனா லவச்சிந்நம் பண்ணப்பட்ட ரஜதம் இருக்குங்கால், அதனா லவச்சிந்நம் பண்ணப்பட்ட அபாவம் ஆண்டு எங்ஙன மிருக்கின்ற தெனின், அற் றன்று, அதிஷ்டானத் தின்கண் ணுள்ள பாரமார்த்திகத் தன்மைக்கு, ரஜதத்தின்

கட்டோற்றம் பொருந்துதலின்; ரஜதத்தின்கண் ணுள்ள பாரமார்த்திகத் தன்மையி னுற்பத்தியை அங்கீகரிக்காமையான் (என்க.) யாண்டு ஆரோப்பிய பதார்த்தம் ஸந்நிகிருஷ்ட மின்றோ, ஆண்டே பிராதிபாசிக வஸ்துவினுற்பத்தி யங்கீகரித்தலான். இதனுனேயே, இந்திரிய ஸந்நிகிருஷ்டத்தால், ஜபா குசுமத்தி லுள்ள செந் நிறத் தன்மைக்கு, ஸ்படிகத்திற் பாநம் பொருந்துதலின், ஸ்படிகத்தின்கண் அநிர்வசநீயமான அருணுேற்பத்தி (அங்கீகரிப்பது) இன்றும் (என் றுணர்க.)

அற்றேல்? இங்ஙன மாயின்? யாண்டு ஜபா குசுமமானது வேறு திரவியத்தின் வியவதாநத்தால் ஸந்நிகிருஷ்டமின்றோ, ஆண்டு அருணம் பிரதீதியாகின்றமையின், பிராதிபாசிகமான செந் நிறம் அங்கீகரிக்க எனின், அற் றன்று, இஷ்ட மாகலின்.

இவ் வாறு, பிரத்தியக்ஷ வேறு பிராந்திகளிலும், பிரத்தியக்ஷ சாமாந்ய லக்ஷண அநுகமமும், யதார்த்தப் பிரத்தியக்ஷ லக்ஷணம் இன்மையு முய்த் துணர்க.

கூறிய பிரத்தியக்ஷம் வேறு பிரகாரத்தால், இந்திரிய ஜந்நியமும், அதன் அஜந்நியமும் என இரு வகைத் தாம். அவற்றுள், இந்திரிய அஜந்நியம். சுகாதிப் பிரத்தியக்ஷ மாம், மநதிற்கு இந்திரியத் தன்மை நிராகரணஞ் செய் திருத்தலின்.

இந்திரியங்கள், கிராணம் ரஸநம் சக்ஷு சுரோத்திரம் துவக் ஸ்வரூப மாகிய ஐந்துகளு மாம். சர்வேந்திரியங்களும் தத் தம் விஷயத்தில் சம்யோக மடைந்தே பிரத்தியக்ஷ ஞாநத்தினை யுண்டாக்குகின்றன. அவற்றுள், கிராணம் ரஸநம் த்வக் ஸ்வரூப மாகிய இந்திரியங்கள், தம் ஸ்தாநத்திலிருந்தே, கந்த ரஸ ஸ்பரிச ஞாநங்களை யுண்டாக்குகின்றன. சக்ஷு, சுரோத்திரங்களோ, ஸ்வயமே விஷய தேசத்தினை யடைந்து தத் தம் விஷயங்களைக் கிரகிக்கின்றன. சுரோத்திரத்திற்கும் சக்ஷு முதலியன போன்று பரிச்சிந்நத் தன்மையால், பேரி முதலிய தேசம் செல்லுதல் பொருந்துதலின். இதனுனே, "பேரி சப்தம் என்னுற் கேட்கப்பட்டது" என்னு மநுபவ மாம். வீசி தரங்க முதலிய நியாயத்தினுல், கர்ண சஷ்குலிப் பிரதேசத்தில், அநந்த சப்த உற்பத்தி கல்பனைக்குக் கௌரவம் வருதலானும், "பேரி சப்தம் என்னுற் கேட்கப்பட்டது" என்னும் பிரத்தியக்ஷத்திற்குப் பிராந்தித் தன்மைக் கல்பநா கௌரவம் வருதலினுனு மென்க. ஆகலின், இவ் வாறு, பிரத்தியக்ஷம் விரித் துரைக்கப்பட்ட தாம்.



1. பிரத்தியக்ஷப் பரிச்சேத முற்றுப் பெற்றது.

## 2. அநுமாந பரிச்சேதம்.

அநந்தரம் அநுமாநம் நிரூபிக்கப்படுகின்றது. அநுமிதியின் கரணம் அநுமாந மாம். அநுமிதியும் வியாப்தி ஞாநத் தன்மையால், வியாப்தி ஞாந ஜந்நிய மாம். வியாப்தி ஞாந, அநுவியவசாயாதிகட்கு, அத் தன்மையான் அதன் ஜந்நியத் தன்மை யின்மையின், அநுமிதித் தன்மை யின்றும். அநுமிதி கரணமும் வியாப்தி ஞாந மாம். அவாந்தர வியா

பாரம் அதன் சமஸ்கார மாம். மூன்றாவது லிங்க பராமரிச
மோ, அநுமிதியின்கட் கரண மின்றாம். அதற்கு அநுமிதி
ஹேதுத் தன்மை சித்தியாமையின், அதன் கரணத் தன்
மைக்குப் பிடர்பிடித்துச் சேய்மைக ளுந்தப்பட்டிருத்தலின்.
சமஸ்கார ஜந்நியத் தன்மையால், அநுமிதிக்கு ஸ்மிருதித்
தன்மை வரு மென்னற்க; ஸ்மிருதிப் பிராகபாவ ஜந்நியத்
துவத்திற்கு, அல்லது, சமஸ்கார மாத்திர ஜந்நியத்துவத்
திற்கு, ஸ்மிருதித் தன்மைப் பிரயோஜகத்தால், சமஸ்காரத்
துவம்ஸ சாதாரணமா சமஸ்கார ஜந்நியத் தன்மைக்கு, அதன்
பிரயோஜகத் தன்மை யின்மையின். யாண்டு வியாப்தியின்
ஸ்மரணத்தினா லநுமிதி யுண்டாகின்றதோ, ஆண்டு எங்ங
னம் சமஸ்காரம் ஏதுவா மென்று கூறற்க; வியாப்தியின்
ஸ்மிருதி ஸ்தலத்திலும், அதன் சமஸ்காரத்திற்கே அநுமிதி
ஹேதுத் தன்மை யிருத்தலின், ஸ்மிருதிக்கு சமஸ்கார
நாசகத் தன்மை நியம மன்றாம்; ஸ்மிருதியின் தாரை
பார்க்கப்படுதலின். அநுற்புத்த சமஸ்காரத்தினாலும்
அநுமிதி வரு மென்னற்க; அதன் உத்போதத்திற்குஞ்
சககாரித் தன்மை யிருத்தலான். ஆகவே, "இது தூம
முடைத்து" என்னும் பக்ஷ தர்மதா ஞாநத்தினால், "தூமம்
வந்நியின் வியாப்பியம்" என்னு மநுபவத்தினா லுண்டாகிய
சமஸ்கார உத்போத மிருக்கு மிடத்து, "வந்நி யுடைத்து"
என்னு மநுமிதி யுண்டாகிறது. மத்தியில் வியாப்தியின்
ஸ்மரணம், அல்லது, அதனினின் றுண்டாய "வந்நியின்
வியாப்பியமான புகையினை யுடையது இது" என்ப தாதி
விசேஷண விசிஷ்ட ஞாநம், காரணத் தன்மையினாற் கற்பிக்
கத் தக்க தன்று; கௌரவத்தானும், பிரமாண மின்மை
யானும் (என்க).



அந்த வியாப்தி ஞாநமும், வந்நி விஷய ஞாநாம்ஸத்தின்
கண்ணே கரண மாம். பர்வத விஷய ஞாநாம்ஸத்தின்கண்
கரண மன்றாம். ஆகலின், "பர்வதம் வந்நி யுடைத்து"
என்னு ஞாநத்திற்கு, வந்நி யம்ஸத்தின்கண்ணே யநுமிதித்
தன்மை யாம். பர்வதாம்ஸத்தின்கண் இன்றாம். அவ் வம்
ஸத்தில் பிரத்தியக்ஷத் தன்மை கூறப்பட்டிருத்தலின்.

வியாப்தியும், எல்லாச் சாதநங்களின் ஆசிரயத்தினை
ஆசிரித் திருக்கின்ற சாத்தியத்தின் சாமாநாதிகரண்ய ரூப
மாம். அதுவும், வியபிசார ஞாந மின்றியதோடு சகசார
தரிசநத்தினாற் கிரகிக்கப்படுகின்றது. அந்தச் சகசார தரி
சநமும், அடுத் தடுத்துக் காண்டல், அல்லது, ஒருகாற்
காண்டல் என்னும் விசேஷமானது கொள்ளத்தக்க தன்றாம்.
சகசார தரிசநத்திற்கே பிரயோஜகத் தன்மை யிருத்தலின்.

அந்த அநுமாநமும், அந்வயி ரூப மொன்றே யாம்.
கேவலாந்வயி யன்றாம். சர்வ தர்மங்கட்கும், நம் மதத்தில்
பிரஹ்மத்தின்கண் ணுள்ள அத்தியந்தாபாவத்திற்குப் பிரதி
யோகித் தன்மை யிருத்தலின், அந்தியந்தாபாவ அப்பிரதி
யோகியாய சாத்தியத்தினை யுடையதாந் தன்மை ரூப
கேவலாந்வயித் தன்மைக்குச் சித்தி யின்மையின். அநு
மாநத்திற்கு வியதிரேகித் தன்மையு மின்றாம்; சாத்தியா
பாவத்தில், சாதநாபாவத்தால் நிரூபிக்கப்படும் வியாப்தி
ஞாநத்திற்குச் சாதநத்தினால் சாத்தியாநுமிதியின்கண்
உபயோக மின்மையின் (என்க).

ஆயின், தூமாதிகளில் அந்வய வியாப்தியினை யுணரா
னுக்கும், வியதிரேக வியாப்தி ஞாநத்தான் எங்ஙன? மநுமிதி

யுண்டாம் (எனின்), அர்த்தாபத்திப் பிரமாணத்தா னென்
றறைகின்றோம். இதனானேயே, அநுமாநத்திற்கு அந்வய
வியதிரேகி ரூபத் தன்மை யின்றாம். வியதிரேக வியாப்தி
ஞாநத்திற்கு அநுமிதி ஹேதுத் தன்மை யின்மையான்
(என்க).

அவ் வநுமாநமும், ஸ்வார்த்த பரார்த்த பேதத்தினா
லிரு வகைத் தாம். அவற்றுள், ஸ்வார்த்தமோ, முற் கூறப்
பட்டதே யாம். பரார்த்தமோ, நியாய சாத்திய மாம்.
நியாய மென்பது அவயவ சமுதாய மாம். அவயமும்,
பிரதிஞ்ஞை ஏது உதாகரண ரூபங்க ளாய மூன்றே யாம்;
அல்லது, உதாகரணம் உபநயம் நிகமந ரூபங்க ளாய
மூன்றே யாம். பஞ்சாவயவ ரூபங்க ளன்றாம். மூன்
றவயங்களானேயே வியாப்தி, பக்ஷ தர்மத் தன்மைகளின்
ஞாநம் சம்பவித்தலான், அதிக மாய இரண்டு அவயவங்கள்
வியர்த்த மாகலின்.

இவ் வாறு, அநுமாந நிரூபிக்குமிடத்து, அதனால்,
பிரஹ்ம பிந்ந மாய சகல பிரபஞ்சத்திற்கும் மித்தையாந்
தன்மை சித்தி யாம். அங்ஙன மன்றோ, பிரஹ்ம பிந்ந மாய
எல்லாம் மித்தை யாம், பிரஹ்ம பிந்ந மாகலின், எஃதிங்
ஙனம், அஃதிங்ஙனம், எங்ஙனம் சுக்தி ரூப்பிய மாம்.
திருஷ்டாந்த அசித்தி என்னற்க; அது சாதிக்கப்பட்டி
ருத்தலின். அப்பிரயோஜகத் தன்மை என்னற்க; சுக்தி
ரூப்பிய, ரஜ்ஜு சர்ப்பாதிகளின் மித்தையாத் தன்மையில்,
பிரஹ்ம பிந்நத் தன்மைக்கே லாகவத்தால் பிரயோஜகத்
தன்மை யிருத்தலின். மித்தையாத் தன்மையும், ஸ்வா



சிரயத் தன்மையா லங்கீகரிக்கப்பட்ட எல்லாவற்றினு
முள்ள அத்தியந்தாபாவப் பிரதியோகித் தன்மை யாம்.
"அங்கீகரிக்கப்பட்ட" என்னும் பதம் உண்மையாகத் தன
தாசிரயம் பிரசித்த மின்மையின், அசம்பவ நிவாரணத்
தின் பொருட் டாம். "எல்லாம்" என்னும் பதம் அர்த்
தாந்தர நிவாரணத்தின் பொருட் டாம். அது, "ஸ்வாசி
ரயத் தன்மையால் அங்கீகரிக்கப்பட்ட அத்தியந்தாபாவத்
தினைக் குறித்துப் பிரதியோகியா யிருக்குந் தன்மை, எல்லாப்
பாவ பதார்த்தங்கட்கு மித்தையாத் தன்மை யாம்". என
(ச் சித் சுகியில், சித் சுகாசாரியாற்) கூறப்பட்டிருக்கின்
றது. அல்லது, இப் படம், இத் தந்துவின்கண் ணுள்ள
அத்தியந்தாபாவப் பிரதியோகி யாம், படத் தன்மையால்,
வேறு படம் போன்று என்ப தாதி யநுமாநம் மித்தை
யாத் தன்மையிற் பிரமாண மாம். அது. "அம்ஸிகள்,
தனது அம்ஸத்தி லுள்ள அத்தியந்தாபாவத்திற்குப் பிரதி
யோகிகள், அம்ஸித் தன்மையான், அந்நிய அம்ஸி
போன்று, குணாதிகளிலும் இந்த ரீதியே யாம்" என
(ச் சித் சுகியிற்) கூறப்பட்டிருக்கின்றது.

கடாதிகட்கு மித்தையாத் தன்மை யிருக்கில், "சத்
கடம்" என்னும் பிரத்தியக்ஷம் பாத மாம் என்னற்க;
அதிஷ்டாந மாகிய பிரஹ்ம சத்தை ஆண்டு விஷய மாகலின்,
கடாதிகட்குச் சத்தியத் தன்மை சித்தியாமையின். ரூப
மின்றிய பிரஹ்மத்திற்குச் சாக்ஷுஷாதி ஞாந விஷயத்
தன்மை யாங்ஙன மென்று கூறற்க; ரூப மின்றிய ரூபா
திக்கும் பிரத்தியக்ஷத் தன்மை யிருத்தலின், ரூப மின்றிய
திரவ்யத்திற்கே, சக்ஷுராதி அயோக்கியத் தன்மை யென்

னும் நியம மின்றாம். எமது மதத்தில் பிரஹ்மத்திற்குத் திரவியத் தன்மை சித்தியாமையின், குணாசிரயத் தன்மை, அல்லது, சமவாயி காரணத் தன்மை, திரவியத் தன்மை யென்ப தின தங்கீகார மாம். நிர்க்குண மாய பிரஹ்மத் திற்குக் குணாசிரயத் தன்மை யின்றாம். சமவாயி காரணத் தன்மையு மின்றாம்; சமவாயம் சித்தியாமையின். அல்லது, பிரஹ்மத்திற்குத் திரவியத் தன்மை யிருக்குக. அங்ஙன மாயினும், ரூப மின்றிய காலத்திற்குப் போன்று, சாக்ஷ- சாதி ஞான விஷயத் தன்மையில் விரோத மின்றாம்.

அல்லது, சத்துவம் மூ வகைத் தாம். பிரஹ்மத்திற் குப் பாரமார்த்திக சத்துவ மாம். ஆகாசாதிகட்கு வியாவ காரிக சத்துவ மாம்; சுக்தி ரஜதாதிகட்குப் பிராதிபாசிக சத்துவ மாம். ஆகவே. "கட மிருக்கின்றது" என்னும் பிரத்தியக்ஷத்திற்கு வியாவகாரிக சத்துவ விஷயத் தன்மை யினாற் பிராமாண்ய மாம். இப் பக்ஷத்தில், கடாதிகட்குப் பிரஹ்மத்தின்கண் நிஷேதம், ஸ்வரூபத்தா னின்றாம். பின் னரோ, பாரமார்த்திகத் தன்மையானே யாம். ஆகலின், விரோத மின்றாம். இப் பக்ஷத்தில், மித்தையாத் தன்மை லக்ஷணத்தில், பாரமார்த்திகத் தன்மையினா லவசிந்நம் பண் ணப்பட்ட பிரதியோகித் தன்மையினை யுடைய தன்மை, அத்தியந்தாபாவத்திற்கு விசேஷணங் கொடுக்குக. ஆக லான், மித்தையாத்வ அநுமாநம் பொருந்து மா றுணர்க.

2. அநுமாநப் பரிச்சேத முற்றுப் பெற்றது.



## 3. உவமாந பரிச்சேதம்.

அநந்தரம் உவமாநம் நிரூபிக்கப்படுகின்றது. ஆண்டு, சாதிருசியப் பிரமையின் கரணம் உவமாந மாம். அங்ஙன மன்றோ, பிராங்கண (கட்டுத் தறியிட) ங்களில் கோ பிண் டத்தினைப் பார்த்து, வநத்திற்குச் சென்ற புருஷனுக்குக், கவயத்தோடு இந்திரிய ஸந்நிகர்ஷ முண்டாங்கால், "இப் பிண்டம் கோ சதிருசம்" என்னும் பிரதீதி யுண்டாகின் றது. அதன் பின், "இதனோடு சமாநம் எனது பசு வாம்" என்னு நிச்சய முண்டாகின்றது ஆண்டு, அந்வய வியதி ரேகங்களால் கவயத்தின்கண் ணுள்ள கோ சாதிருசிய ஞாநம் கரண மாம். கோவின்கண் ணுள்ள கவய சாதிருசிய ஞாநம் பல மாம்.

இது பிரத்தியக்ஷத்தினாற் சம்பவிப்ப தின்றாம்; கோ பிண்டத்திற்கு அப் பொழுது இந்திரியத்தோடு ஸந்நிகர்ஷ மின்மையின். அநுமாநத்தினானும் சம்பவிப்ப தின்றாம்; கவயத்தி லுள்ள சாதிருசிய ஞாநம் அதன் லிங்க மன்றாக லின். எனது பசு, இக் கவயத்தின் சதிருசி யாம், இதன் னுள்ள சாதிருசியப் பிரதியோகித் தன்மையான், எது எதன்கண் ணுள்ள சாதிருசியத்தின் பிரதியோகி, அது அதன் சதிருச மாம். எங்ஙனம்? மைத்திரனிடத் துள்ள சாதிருசியத்தின் பிரதியோகி யாய சைத்திரன், மைத்திர சதிருச னாம் என்னு மநுமாநத்தினால், அது பொருந்து கின்றதென்று கூறற்க; இவ் வாறாய, அநுமாந அவதார மின்றி யிருப்பினும், "இதனோடு சதிருச முடையது எனது பசு வாம்" என்னும் பிரதீதி யநுபவ சித்த மாகலானும்,

"உவமிக்கின்றேன்" என்னும் அநுவியவசாயத்தானும் (என்க). ஆகலின், உவமாநம் வேறு பிரமாண மாம்.

3. உவமாந பிரிச்சேத முற்றுப் பெற்றது.

## 4. ஆகம பரிச்சேதம்.

அநந்தரம் ஆகமம் நிரூபிக்கப்படுகின்றது. எந்த வாக்கியத்தின் தாத்பரிய விஷயி ரூப சம்ஸர்க்கமானது வேறு பிரமாணத்தால் பாதிக்கப்படுவ தின்றோ; அவ் வாக்கியம் பிரமாண மாம். வாக்கிய ஜந்நிய ஞாநத்திலும், ஆகாங்க்ஷை, யோக்கியதை, ஆசக்திகளும், தாத்பரிய ஞாநமும் ஆகிய நான்குங் காரணங்க ளாம். அவற்றுள், பதார்த்தங்களின் பரஸ்பர ஜிஞ்ஞாசையின் விஷயத் தன்மை யாகிய யோக்கியத் தன்மை ஆகாங்க்ஷை யாம். கிரியையின் சிரவணத்தில், காரகத்திற்கும், அதன் சிரவணத்தில், கிரியைக்கும், கரண சிரவணத்தில், இதி கர்த்தவ்யத் தன்மைக்கும் ஜிஞ்ஞாசையின் விஷயத் தன்மை யிருத்தலின். ஜிஞ்ஞாசை யின்றியவனுக்கும் வாக்கியார்த்த ஞாநமுண்டாகலான், யோக்கியத் தன்மை கொள்ளப்பட்ட தாம். அத னவச்சேதகமும், கிரியாத் தன்மை, காரகத் தன்மை முதலியன வாம். ஆகலின், "கௌ, அசுவம், புருஷன், யானை" என்ப தாதிகளில் அதிவியாப்தி யின்றாம். அபேதாந்வயத்திலுப, சமாந விபக்தியினை யுடைய பதப் பிரதிபாத்தியத் தன்மை அத னவச்சேதக மாம். ஆகலின், தத்துவமசி யாதி வாக்கியங்களில் அவ்வியாப்தி யின்றாம். இவ் வாறாய, ஆகாங்க்ஷையின் அபிப்பிராயத்தினனேயே பலாபல அதிகாணத்தில்,



"அது விசுவ தேவரின் பொருட்டு ஆமிக்ஷை, வாஜியின் பொருட்டு வாஜிநம் (தயிரி லுள்ள ஜலம்)" என்னு மிடத்து வைசுவ தேவ யாகத்திற்கு ஆமிக்ஷையோ டந்வயித் திருத்தலால், வாஜிநத்தின் ஆகாங்க்ஷை யின்று என்ப தாதி வியவகார மாம்.

அற்றேல், ஆண்டும், வாஜிநத்திற்குச் ஜிஞ்ஞாசையின் அவிஷயத் தன்மை யிருப்பினும், அதன் யோக்கியத் தன்மை யிருக்கின்றது. பிரதேயத் திரவியத் தன்மைக்கு, யாகத்தால் நிரூபிக்கப்பட்ட ஜிஞ்ஞாசையின் விஷயத் தன்மை யாய யோக்கியத் தன்மையின் அவச்சேதகத் தன்மை யிருத்தலின் எனின், அற்றன்று; தனது சமாந ஜாதியை யுடைய பதார்த்தங்களின் அந்வய போத மின்றியதோடு கூடிய பிரதேயத் திரவியத் தன்மைக்கே, அத னவச்சேதகத் தன்மை யிருத்தலின், வாஜிந திரவியத்திற்குத் தனது சமாந ஜாதியை யுடைய பதார்த்தங்களின் அந்வய போதத்தோடு கூடி யிருத்தற் றன்மையால், அவ் வித அவச்சேதகத் தன்மை யின்மையின். ஆமிக்ஷையின் கண்ணே, இங்ஙன மன்றாம். வாஜிந அந்வயத்திற்கு அப் பொழுது உபஸ்திதி யின்மையின். வேறு உதாகரணங் களிலும் தூர்ப்பலப் பிரயோஜக மாகிய ஆகாங்க்ஷை யின்மை என்றே உணர்க.

யோக்கியத் தன்மையும், தாத்பரியத்திற்கு விஷய மாய சம்பந்தத்தின் பாதாபாவ மாம். "வந்நியால் தெளிக்க" என்ப தாதியில், அவ்வாறாய ஸம்ஸர்க்கம் பாதிக்கப் படுதலான் அதி வியாப்தி (யோக்கியத் தன்மை) யின்றாம். "அந்தப்

பிரஜாபதி தனது ஈரலை வெளியி லெடுத்தார்'' என்ப தாதிகளிலும், தாத்பரிய விஷயி ரூப மான பசுவின் சிரேஷ்டத் தன்மை பாதிக்கப்படாமையான் யோக்கியத் தன்மை யாம். தத்துவமசி யாதி வாக்கியங்களிலும், வாச்சி யத்தி னபேதகத்திற்குப் பாத மிருப்பினும், லக்ஷிய ஸ்வ ரூபத்தின் அபேதத்தில் பாத மின்மையால் யோக்கியத் தன்மை யாம். (என் றுணர்க.)

ஆசத்தியும் வியவதாந மின்மையால், பதஜந்திய பதார்த்த உபஸ்திதி யாம். வேறு பிரமாணத்தினுல் தோற்றுவிக்கப்பட்ட பதார்த்தத்திற்கு அந்வய போத மின்மையால், ''பத ஜந்யம்'' என்று கூறப்பட்ட தாம். இதனுனேயே, கேட்கப்படாத பதார்த்த ஸ்தலத்தில், அவ் வப் பதங்களின் அத்தியாகார மாம். ''த்வாரம் (வாயிலை)'' என்ப தாதியில், ''பிதேஹி (மூடுக)'' என்னும் (பதம் அத்தியாகார மாம்.) இதனுனேயே, ''இஷே (ஹே சாகை யே! அந்நத்தின் பொருட்டு) த்வாம் (உன்னை)'' என்ப தாதியில், ''சிநத்மி (வெட்டுகின்றேன்)'' என்னும் பதம் அத்தியாகார மாம். இதனுனேயே, விகிர்தி (யாகங்) களில் ''ஸூர்யாய (சூரியன் பொருட்டு) ஜுஷ்டம் (நன்றுய்ச் சேவிக்கப்பட்ட) நெல் லாகிய உன்னை நிர்வபாமி (சம்பாதிக் கின்றேன்)'' என்னும் பதப் பிரயோக மாம்.

பதார்த்தமும், சக்கியமும், லக்ஷியமு மென இரு வகைத் தாம். அவற்றுள், சக்தி யென்பது பதங்கட்கு அர்த்தங்களி னுள்ள முக்கிய விருத்தி யாம். எங்ஙனம்? கட பதத்திற்கு குவிந்தும் வளைந்து முள்ள கழுத்து



முதலியவற்றோடு கூடிய ஆகிர்தி விசிஷ்ட வஸ்து விசேஷத் தில் விருத்தி யாம். அந்தச் சக்தியும், வேறு பதார்த்த மாம். சித்தாந்தத்தில், காரணங்களி லுள்ள காரியாநுகூல சக்தி மாத்திரத்திற்கு வேறு பதார்த்தத் தன்மை யுண்மை யா மாகலின். அதுவும், அவ் வப் பதங்களினு லுண்டாய பதார்த்த ஞாந ரூப காரியத்தால் அநுமிக்கற்பால தாம்.

அவ் வித சக்தி விஷயத் தன்மை சக்கியத் தன்மை யாம். அதுவும், ஜாதிக்கே யாம், வியக்திக் கின்றும். வியக்தி கட்கு அநந்தத் தன்மை யிருத்தலான், குருத் தன்மை யாகலின்.

ஆயின், கோ முதலிய பதங்களால் வியக்தியின் பாநம் யாங்ஙன மெனின், ஜாதி யானது வியக்தியின் சமாநமாந ஞாநத்தினுல் அறியக் கூடிய தாகலின் என்று கூறுகின் றோம். அல்லது, கோ முதலிய பதங்கட்கு வியக்தியின் கண் சக்தி ஸ்வரூப சத்தா யிருக்கின்ற தாம், அறியப்பட்ட தன்றும். ஜாதியின்கண்ணே, அது அறியப்பட்ட தாய் ஏது வாகின்றது. வியக்தி யம்ஸத்தில் சக்தி ஞாநமும் காரண மன்றும்; கௌரவ மாகலானும், ஜாதி சக்தி யுடைய தென்னும் ஞாந மிருக்குங் காலத்தில், வியக்தி சக்தி ஞாந மின்றி, வியக்தி ஞாநம் விலம்ப மின்மையானும் (என்க.) இதனுனேயே, நியாய மதத்திலும், அந்வபத்தின்கண் சக்தி, ஸ்வரூப சத்தா யிருக்கின்ற தென்பது சித்தாந்த மாம்.

அறியப்பட்ட சக்தி விஷயத் தன்மையே வாச்சியத் தன்மை யாம். ஆகலின், ஜாதியே வாச்சிய மாம்.

அல்லது, வியக்தி லக்ஷணையா லறியப்படுகின்ற தாம். எங்ஙனம், "நீலக் கடம்" என்புழி நீல சப்தத்திற்கு நீல குண விசிஷ்டத்தில் லக்ஷணை யாம். அங்ஙனமே, ஜாதி வாசகத்திற்கு அதன் விசிஷ்டத்தில் லக்ஷணை யாம். அது, "அந்நியத்தால் அடையப்படாதது பதத்தின் பொரு ளாம்" எனக் கூறப்பட்டிருக்கின்றது. இங்ஙனம் சக்தியார்த்தம் நிரூபிக்கப்பட்ட தாம். (என் றுணர்க.)

பின்னர், லக்ஷிய பதார்த்தம் நிரூபிக்கப்படுகின்றது. ஆண்டு, லக்ஷணையின் விஷயம் லக்ஷிய மாம். லக்ஷணை கேவல லக்ஷணையும், இலக்ஷித லக்ஷணையும் என இரு வகைத் தாம். அவற்றுள், சக்கியத்தின் சாக்ஷாத் சம்பந்தம் கேவல லக்ஷணை யாம். எங்ஙனம், "கங்கைக்கண் கோஷம்" என்புழிப் பிர வாகத்தின் சாக்ஷாத் சம்பந்தி யாகிய தீரத்தில் கங்கா பதத் திற்குக் கேவல லக்ஷணை யாம். யாண்டுச் சக்கியத்தின் பரம்பரா சம்பந்தத்தினல் வேறு அர்த்தம் தோற்றுகின்ற தோ, ஆண்டு லக்ஷித லக்ஷணை யாம். எங்ஙனம் ரேப த்வயங்களிற் சக்தி யுடைய துவி ரேப பதத்திற்குப், பிரமர பதத்துடன் கூடிய பரம்பரா சம்பந்தத்தினல் வண்டி னிடத்தில் விருத்தி யாம்.

கௌணியும், இலக்ஷித லக்ஷணையே யாம். எங்ஙனம், "சிம்ஹமம் மாணவன்" என்புழிச் சிம்ஹ சப்த வாச்சிய சம்பந்தி யாய குரூரத் தன்மை முதலிய சம்பந்தத்தினல் மாணவன் பிரதீதியாகின்றமையின்.

வேறு பிரகாரத்தால், ஜகல் லக்ஷணையும், அஜகல் லக்ஷணை யும், ஜகதஜகல் லக்ஷணையும் என லக்ஷணைகள் மூவகைத் தாம்.



யாண்டுச் சக்கியத்தின் அந்தர்ப் பாவ மின்றி, வேறு அர்த்தம் தோற்றுகின்றதோ, ஆண்டு ஜகல் லக்ஷணை யாம். எங்ஙனம், "விஷத்தினைப் புஜிக்க" என்புழித் தன தர்த்தத்தினை விட்டுச் சத்துரு கிருகத்தில் போஜந நிவிர்த்தி லக்ஷித மாம்.

யாண்டுச் சக்கியார்த்தத்தினை யந்தர்ப் பாவஞ் செய்தே, வேறு அர்த்தம் பிரதீதியாகின்றதோ, ஆண்டு அஜகல் லக்ஷணை யாம். எங்ஙனம், "சுக்லம் கடம்" என்புழிச் சுக்ல சப்த மானது தன தர்த்த மாகிய சுக்ல குணத்தினை அந்தர்ப் பாவஞ் செய்தே, அதனை யுடைய திரவியத்தில் லக்ஷணை யால் இருக்கின்றது.

யாண்டு, விசிஷ்ட வாசக சப்த மானது தன தர்த்தத் தின் ஏக தேசத்தினை விட்டு ஏக தேசத்தி லிருக்கின்றதோ, ஆண்டு ஜகதஜகல் லக்ஷணை யாம். எங்ஙனம், "சோயந் தேவ தத்தன்" என்புழிப் பத த்வய வாச்சிய மாய விசிஷ்டங் கட்கு ஐக்கியம் பொருந்தாமையால், இரு பதத்திற்கு விசேஷிய மாத்திர பரத் தன்மை யாம். அன்றியும், எங்ஙனம் "தத்துவ மசி" என்ப தாதிகளில், தத் பத வாச்சிய மாய சர்வஞ்ஞத்துவாதி விசிஷ்டத்திற்குத், துவம் பத வாச்சிய மாய அந்தக்கரண விசிஷ்டத்தினேடு ஐக்கியம் பொருந்தாமையால், ஐக்கிய சித்தியின் பொருட்டு, ஸ்வரூபத் தின்கண் லக்ஷணை எனச் சம்பிரதாய முணர்ந்தோர் சாற்று கின்றனர்.

நாமோ கூறுகின்றோம்:— "சோயந் தேவ தத்தன்", "தத்வ மசி" என்ப தாதிகளில், விசிஷ்ட வாசக பதங்கட்கு ஏக தேச பரத் தன்மை யிருப்பினும், லக்ஷணை யின்றாம்.

சக்தியினுல் உபஸ்தாபிக்கப்பட்ட விசிஷ்டங்கட்கு அபே தாந்வயம் பொருந்தாவிடத்துச், சக்தியினுல் உபஸ்தாபிக்கப் பட்ட விசேஷியங்கட்கே அந்வய போதத்தில் விரோத மின்மையின். எங்ஙனம்? "கடம் அநித்தியம்" என்புழிக் கட பத வாச்சிய மாய ஏக தேச கடத்துவத்திற்கு, அயோக் கியத் தன்மை யிருப்பினும், யோக்கிய மாய கட வியக்தியி னேடு அநித்தியத் தன்மையின் அந்வயம் உண்டாகின்றது. யாண்டு பதார்த்தத்தின் ஏக தேசத்திற்கு விசேஷணத் தால் உபஸ்திதியாகின்றதோ, ஆண்டே ஸ்வதந்தரமாக உபஸ்திதி யாதற் பொருட்டு லக்ஷணையின் அங்கீகார மாம். எங்ஙனம், "நித்தியங் கடம்" என்புழிக் கட பதத்தால் கடத் துவத்திற்குச் சக்தியினுல் ஸ்வதந்திரமாக உபஸ்திதி யாகா மையின்; அவ் வித உபஸ்திதியின் பொருட்டுக் கட பதத் திற்குக் கடத்துவத்தின்கண் லக்ஷணை யாம். இங்ஙனமே தத்வமசி யாதி வாக்கியத்தின்கண்ணும் லக்ஷணை யின்ரும். சக்தியினுல் ஸ்வதந்திரமாகத் தோற்றுகின்ற தத்த்வம் பதங் களின் அபேதாந்வயத்தில் பாதக மின்மையின்.

இங்ஙனங் கொள்ளாக்கால், "கிரகத்தில் கடம், 'கடத் தில் ரூபம், 'கடத்தினைக் கொணர்க" என்ப தாதிகளில், கடத் தன்மை, கிரகத் தன்மை முதலியவற்றிற்கு இஷ்ட மான அந்வய போத அயோக்கியத்தால், ஆண்டும் கடாதி பதங்கட்கு விசேஷிய மாத்திர பரத் தன்மை லக்ஷணை யானே யுண்டாம். ஆகலின், "தத்வ மசி" என்னும் வாக்கி யத்தில், ஆசார்யர்கள் லக்ஷணை கூறியது அப்யுபகம வாதத் தினு லென வறிக. ஜகதஜகல் லக்ஷணையின் உதாகரணமோ, "காகத்தினின்றுந் தயிரைக் காப்பாற்றுக" என்ப தாதிகளே



யாம். ஆண்டுச் சக்கிய மாகிய காக பரித்தியாகத்தினுல், அசக்கிய மாகிய தயிரை யழிக்குந் தன்மையால், காக மின்றிய திலும், காகத்திலும், காக சப்தத்தின் பிரவிர்த்தி யாகலின்.

லக்ஷணையின் பீஜமோ, தாத்பர்யாநுபபத்தியே யாம். அந்வயாநுபபத்தி யன்ரும். "காகத்தினின்றுந் தயிரை ரக்ஷிக்க" என்புழி அந்வயாநுபபத்தி யின்மையின். "கங்கை யிற் கோஷம்" என்ப தாதியில், தாத்பர்யாநுபபத்தியு மிருத்தலின்.

லக்ஷணையும், பத மாத்திர விருத்தி யன்ரும்; பின்னை யோ, வாக்கியத்தின்கண்ணு மிருப்ப தாம் எங்ஙனம்? "கம்பீர நதிக்கண் கோஷம்" என்புழி, "கம்பீரம், நதி" யென்னும் இரு பதங்களின் சமுதாயத்திற்குத் தீரத்தின் கண் லக்ஷணை யாம்.

அற்றேல், வாக்கியம் அசக்த மாகலின், சக்கிய சம்பந்த ரூப மான லக்ஷணை யாங்ஙனம்? (எனின்,) கூறப்படுகின்றது. சக்தியினுல் எது பத சம்பந்தத்தினு லறிவிக்கப்படுகின்ற தோ, அதன் சம்பந்தம் லக்ஷணை யாம். சக்தியினு லறி விக்கப்படுந் தன்மையும், எங்ஙனம் பதார்த்தமோ, அங் ஙனமே வாக்கியார்த்தமு மா மாகலின், ஓர் அநுபபத்தியு மின்ரும்.

இங்ஙனமே, ஸ்துதி ரூப அர்த்த வாத வாக்கியங்கட்கு ஸ்துதியில் லக்ஷணை யாம். "அது அமுதது" என்ப தாதி நிந்தார்த்த வாக்கியங்கட்கு, நிந்திதத் தன்மையில் லக்ஷணை யாம். அர்த்த வாதத்தி லுள்ள பதங்கட்கு, ஸ்துதியில்

லக்ஷணை யங்கீகரிக்கில், ஒரு பதத்தினால் லக்ஷணையால், அதன் உபஸ்திதி சம்பவிக்கு மிடத்து வேறு பதங்கள் வியர்த்த மாம். இவ் வாறே, விதியினா லபேக்ஷிக்கப்படும் ஸ்துதி ரூப பதார்த்தத்தினை யறிவித்தலால், அர்த்த வாத பத சமுதாயத்திற்கு பத ஸ்தாநத் தன்மை யிருத்தலால், விதி பதத்தோடு ஏக வாக்கியத் தன்மை யாகின்றது, ஆகலின், அர்த்த வாத வாக்கியங்கட்கு பதைகவாக்கியத் தன்மை யாம்.

ஆயினும், வாக்கியங்களின் ஏக வாக்கியத் தன்மை யாது? (எனின்,) யாண்டு ஒவ் வொன்றும், தனித் தனி பிந்ந பிந்ந சம்சர்க்கத்தினைப் பிரதிபாதிக்கும் வாக்கியங்கட்கு, ஆகாங்க்ஷையின் வசத்தால் மஹா வாக்கியார்த்தத்தினைப் போதிக்குந் தன்மை யிருக்கின்றனவோ, ஆண்டு வாக்கியைகவாக்கியத் தன்மை யாம். எங்ஙனம், "தர்ச பூர்ண மாசாப்யாம் (தர்ச பூர்ண மாசங்களால்) ஸ்வர்க்க காம: (துறக்கம் விழைவோன்) யஜேத (வேட்க)" என்ப தாதி வாக்கியங்கட்கும், "சமித: (சமிக தென்னும் பெயரினை யுடைய) யஜதி (யாகத்தினைச் செய்க)" என்ப தாதி வாக்கியங்கட்கும், பரஸ்பரம் ஆகாங்க்ஷிக்கப்பட்ட அங்காங்கி பாவத்தினைப் போதித்தலால், ஏக வாக்கியத் தன்மை யாம். அது பட்டபாதரால், "தம தர்த்தத்தினைப் போதிப்பதில் சமாப்த மான வாக்கியங்கட்கு, அங்காங்கித் தன்மை முதலிய அபேக்ஷையினால், மீண்டுஞ் சேர்க்கை யுண்டாய், ஏக வாக்கியத் தன்மை யுண்டாகின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது. இவ் வாறு, இரு வித பதார்த்தங்களும் நிரூபிக்கப்பட்டன. அதன் உபஸ்திதி ஆசக்தி யாம்.



அதுவும், சாப்த போதத்தில் ஏது வாம். அங்ஙனமே, அந்வய வியதிரேகம் பார்க்கப்படுதலின். இங்ஙனமே, மஹா வாக்கியார்த்த ஞாநத்தில், அவாந்திர வாக்கியார்த்த ஞாநம் ஏது வாம். அங்ஙனமே, அந்வய முதலியன நிச்சயிக்கப்படுதலான் (என்க.)

கிரம மாக வடைந்த தாத்பர்யம் நிரூபிக்கப்படுகின்றது. ஆண்டு, அதன் பிரதீதி யிச்சையால் லுச்சரிக்கப்படுந் தன்மை தாத்பர்ய மன்றாம்; அர்த்த ஞாந மின்றிய புருஷனால் உச்சரிக்கப்படும் வேதத்தினால் அர்த்த ஞாந மின்மைப் பிரசங்கத்தால், "இந்த அத்தியாபகன் அவியுற்பந்நன்" என்னும் விசேஷ தர்சநத்தினால் தாத்பர்யப் பிராந்தியு மின்றாகலின். ஈசுவரனது தாத்பர்ய ஞாநத்தால் ஆண்டுச் சாப்த போதமா மென்று கூறற்க; ஈசுவரனை அங்கீகரிக்காதவர்கட்கும் அந்த வாக்கியார்த்த ஞாநம் பார்க்கப்படுதலின். அதன் பிரதீதியினை யுண்டாக்கும் யோக்கியத் தன்மை தாற்பரிய மாம் என்று கூறப்படுகின்றது. "கிரகத்திற் கடம்" என்னும் வாக்கியம் கிரகத்தில் கட ஸம்ஸர்க்கத்தின் பிரதீதியை யுண்டாக்கும் யோக்கிய மாம். பட ஸம்ஸர்க்கத்தின் பிரதீதியினை யுண்டாக்கும் யோக்கியமோ யின்றாம். ஆகலின், அவ் வாக்கியம் கட ஸம்ஸர்க்க பர மாம், பட ஸம்ஸர்க்க பர மன் றென்று கூறப்படுகின்றது.

அற்றேல், "சைந்தவத்தினைக் கொணர்க" என்ப தாதி வாக்கியம் எப் பொழுது லவணத்தினைக் கொண்டு வரும் பிரதீதி இச்சையா லுச்சரிக்கப்பட்டதோ, அப் போதும்,

அசுவ ஸம்ஸர்க்கத்தின் பிரதீதியினை யுண்டாக்குங் காலத்
திலும், ஸ்வரூப யோக்கியத் தன்மை யிருத்தலின், லவண
பரத்துவ தசையிலும், அசுவாதி ஸம்ஸர்க்க ஞானம் வரு
மாலோ வெனின், அற் றன்று; அதன் இதரப் பிரதீதி
யிச்சையா லுச்சரிக்கப்படாத் தன்மைக்கும் தாத்பர்யத்
தைக் குறித்து விசேஷணத் தன்மை யிருத்தலின். ஆகவே,
எந்த வாக்கியம் எதன் ஞானத்தினை யுண்டாக்கும் யோக்கி
யத் தன்மையோடு எதன் அந்நியப் பிரதீதி இச்சையா
லுச்சரிக்கப்பட வில்லையோ, அந்த வாக்கியம் அதன்
ஸம்ஸர்க்க பரம் எனக் கூறப்படுகின்றது. கிளி முதலிய
வாக்கியங்களிலும், அவியுற்பந்நனு லுச்சரிக்கப்பட்ட வேத
வாக்கியாதிகளிலும், அதன் பிரதீதி யிச்சையே யின்மை
யான், அதன் அந்நியப் பிரதீதி யிச்சையா லுச்சரிக்கப்
படுந் தன்மை யின்மையால், லக்ஷண மிருத்தலின் அவ்
வியாப்தி யின்றாம். இரண்டின் பிரதீதி இச்சையா லுச்
சரிக்கப்பட்ட விடத்து அவ்வியாப்தி யின்றாம். அதன்
அந்நிய மாத்திரப் பிரதீதியின் இச்சையினு லுச்சரிக்க
ப்படாத் தன்மையே கருத் தாகலின்.

புகன்ற பிரதீதியினை மாத்திரம் உண்டாக்கும் யோக்
கியத் தன்மையின் அவச்சேதகம் சக்தி யாம். நமது மதத்
தின்கண்ணே, யாண்டும் காரணத் தன்மைக்குச் சக்தியே
யவச்சேதக மாதலின். ஆதலின், ஒரு தோஷமு மின்றாம்.

இவ் வாறு, அதன் பிரதீதியினை யுண்டாக்குந் தன்மை
ரூப தாத்பர்யத்திற்குச் சாப்த ஞானத்தினை யுண்டாக்குந்
தன்மை சித்திக்கு மிடத்து விவரணத்தின் நான்காவது



வர்ணகத்தில், தாத்பர்ய ஞானத்திற்குச் சாப்த ஞான காரணத்
தன்மையி னிராகரண வாக்கிய மானது, அதன் பிரதீதியி
னிச்சையினு லுச்சரிக்கப்படுந் தன்மை ரூப தாத்பர்யத்தி
னது நிராகரண பர மாம். இங்ஙனங் கொள்ளாக்கால்,
தாத்பர்ய நிச்சய பலத்தினை யுடைய வேதாந்த விசாரத்
திற்கு வியர்த்தத் தன்மை வருதலின் (என்க.)

சிலரோ, சாப்த ஞானத் தன்மை யவச்சேதகத்தினுல்
தாத்பர்ய ஞானங் காரண மன்று என்னும் பரமே, நான்
காவது வர்ணக வாக்கிய மாம். தாத்பர்ய சம்சய, விபர்ய
யங்களின் பின் னுண்டாம் சாப்த ஞான விசேஷத்திலும்
தாத்பர்ய ஞானங் காரணமே யாம். இவ் வாக்கியம், "இதன்
பரம்? அல்லது அந்நிய பரம்?" என்னுந் தாத்பர்ய
சம்சயத்திலும், அதன் விபர்யயத்திலும், அதன் உத்தர
வாக்கியார்த்த நிச்சயத்திற்குத் தாத்பர்ய நிச்சய மின்றிப்
பொருந்தாமையின் என்று கூறுகின்றனர்.

அந்தத் தாத்பர்யம் வேதத்தின்கண் மீமாம்சையாற்
பரிசோதிக்கப்பட்ட நியாயத்தானே நிச்சயிக்கப்படுகின்
றது. லோகத்தின்கண்ணே, பிரகரணுதிகளா லாம். அவற்
றுள், லௌகிக வாக்கியங்கட்குப் பிரமாணுந்தரத்தா லறியப்
பட்ட அர்த்தத்தால் அநுவாதகத் தன்மை யாம். வேதத்
தின்கண்ணே, வாக்கியார்த்தத்திற்கு அபூர்வத்தா லநுவாத
கத் தன்மை யின்றாம். ஆண்டு லோகத்திலும், வேதத்தி
லும், காரிய பர (வாக்கிய) ங்கட்குப் போன்று, சித்தார்த்த
(வாக்கிய) ங்கட்கும் அபூர்வத்தினுற் பிராமாண்ய மாம்.
"உனக்கு மகன் பிறந்தான், உனது கந்நிகை கர்ப்பிணி"

என்ப தாதி சித்தார்த்த (வாக்கிய) ங்களிலும் பதங்கட்குச் சாமர்த்தியம் நிச்சயிக்கப்படுதலான். இதனானேயே, வேதாந்த வாக்கியங்கட்குப் பிரஹ்மத்தின்கண் பிராமாண்ய மாம். எங்ஙன மிஃதாம், அங்ஙனம் விஷய பரிச்சேதத்திற்கூ றப்படும்.

ஆண்டு, வேதாந்தங்கட்கு நித்திய சர்வஞ்ஞ பரமேசுவர னியற்றிய தன்மையால், பிராமாண்ய மென நையாயிகர் கூறுகின்றனர். வேதங்கட்கு நித்தியத் தன்மையால் சமஸ்த புருஷ தோஷ மின்மையின் பிராமாண்ய மென மீமாஞ்சகர் கூறுகின்றனர். நமது மதத்தின்கண்ணே, வேதம் நித்திய மன்றாம், உற்பத்தி யுடைமையின். உற்பத்தி யுடைமையும், "இம் மஹா பூதத்தின் நிசுவாசம் இந்த ரிக் வேதம், எஜுர் வேதம், சாம வேதம், அதர்வ வேத மாம்" என்ப தாதி சுருதியால், வேதங்கட்கு முக்கணம் நிலை யுடைமையு மின்றாம். "எந்த வேதம் தேவ தத்தனா லத்தியயநஞ் செய்யப்பட்டதோ, அந்த வேதமே என்னாலும்" என்ப தாதி பிரத்தியபிஞ்ஞையின் விரோதத்தினால். இதனானேயே, க, கார முதலிய வர்ணங்கட்கும் க்ஷணிகத் தன்மை யின்றாம். "சோயம் க, காரம்" என்னும் பிரத்தியபிஞ்ஞையின் விரோதத்தால்.

ஆகவே, வர்ண, பத, வாக்கிய சமுதாய மாய வேதத்திற்கு ஆகாசாதி யுறழச் சிருட்டி காலத்தி லுற்பத்தி யுடைத்தாந் தன்மையும், பிரளய காலத்தில் தவம்ஸப் பிரதியோகித் தன்மையு மாம். மத்தியில் வர்ணங்களின் உற்பத்தி விநாசங்களோ வின்றாம். அநந்த க, கார கற்பனைக்



கண் கௌரவ மிருத்தலின். உச்சரிக்கப்படாத காலத்தில் வர்ணங்களின் தோற்ற மின்மை, அதன் உச்சாரண ரூப வியஞ்சக மின்மையால், அந்தகாரத்தி லுள்ள கடத்தின் தோற்ற மின்மை போன்று விருத்த மின்றாம். "உண்டாயிற்று க, காரம்" என்ப தாதிப் பிரத்தியக்ஷமோ, "சோயம் க, காரம்" என்ப தாதிப் பிரத்தியபிஞ்ஞையின் விரோதத்தால் அப்பிரமாண மாம். அல்லது, வர்ணத்தினை யபிவியஞ்சகஞ் செய்யும் ஓசையின்கண் ணுள்ள உற்பத்தியினால் நிரூபிக்கப்பட்ட பரம்பரா சம்பந்த விஷயத் தன்மையினால் பிரமாண மாம். ஆகலின், வேதங்கட்கு க்ஷணிகத் தன்மை யின்றாம் (என்க.)

அற்றேல், க்ஷணிகத் தன்மை யில்லாவிடினும், ஆகாசாதிப் பிரபஞ்சம் புரைய, உற்பத்தி யுடைமையான் பரமேசுவரனாற் செய்யப்பட்டதாற் பௌருஷேயத் தன்மை சித்திக்கு மிடத்து, "வேதங்கட்கு அபௌருஷேயத் தன்மை யாம்" என்னும் உனக்கும் சித்தாந்தக் கேடு வருமாமாலோ வெனின், அற் றன்று; புருஷனா லுச்சரிக்கப்படுந் தன்மை பௌருஷேயத் தன்மை யன்றாம். குரு மதத்திலும், அத்தியாபகாது பரம்பரையினாற் பௌருஷேயத் தன்மை வருதலின். புருஷாதீந உற்பத்தி யுடைத்தாந் தன்மையு மன்றாம். நையாயிகர்களாற் கொள்ளப்பட்ட பௌருஷேயத் தன்மை யநுமாநத்தில், நம் முதலியோரால் சித்த சாதநத் தன்மை வருதலின். பின்னையோ, சமாந ஜாதியினை யுடைய உச்சாரணத்தின் அபேக்ஷையின்றிய உச்சாரண விஷயத் தன்மை பௌருஷேயத் தன்மை யாம். ஆகவே, சிருஷ்டியின் முதற் காலத்தில்,

பரமேசுவரன் பூர்வ சிருஷ்டியிற் சித்தித்த வேதத்தின் தொடர் மொழிச் சமான மாய தொடர் மொழியினை யுடைய வேதத்தினை யியற்றினான். அதன் விஜாதீய மான வேதத்தினை யன்றாம். ஆகலின், சமான ஜாதியினை யுடைய உச்சாரணத்தின் அபேக்ஷை யின்றிய உச்சாரண விஷயத் தன்மையாகிய பௌருஷேயத் தன்மை யின்றாம். பாரதாதிகட்கோ, சமான ஜாதியினை யுடைய உச்சாரணத்தினை அபேக்ஷிக்காமலே உச்சாரணமா மாகலின், அவற்றிற்குப் பௌருஷேயத் தன்மை யாம்.

இவ் வாறு, பௌருஷேய, அபௌருஷேய பேதத்தினால் ஆகமம் இரு வகைத்தாக நிரூபிக்கப்பட்ட தாம்.

4. ஆகம பரிச்சேத முற்றுப் பெற்றது.

## 5. அர்த்தாபத்திப் பரிச்சேதம்.

இப் பொழுது அர்த்தாபத்தி நிரூபிக்கப்படுகின்றது ஆண்டு உபபாத்திய ஞாநத்தினால் உபபாதக கற்பநம் அர்த்தாபத்தி யாம். ஆண்டு உபபாத்திய ஞாநம் கரண மாம். உபபாதக ஞாநம் பல மாம். எஃதின்றி எது பொருந்த வில்லையோ, அஃது ஆண்டு உபபாத்திய மாம். எத னுடைய அபாவத்தில், எதன் அநுபபத்தியாமோ, அது ஆண்டு உபபாதக மாம். எங்ஙனம்? இராத்திரி போஜந மின்றிப் பக லுண்ணானுக்குப் பருமத் தன்மைப் பொருத்த மின்மை யாகலின், அவ் வித பீநத் தன்மை உபபாத்திய மாம். எங்ஙனம் இராத்திரி போஜநத்தி



னபாவத்தில், அவ் வித பீநத் தன்மை பொருந்தாமையின் இராத்திரி போஜநம் உபபாதக மாம். இராத்திரி போஜந கற்பநா ரூபப் பிரமிதியில், அர்த்தத்தி னுடைய, ஆபத்தி—கற்பநம் என்னும் ஆறாம் வேற்றுமைத் தொகையினால், அர்த்தாபத்திச் சப்த மானது பிரவிர்த்திக்கின்றது. கற்பனையின் கரண மாகிய பீநத் தன்மை முதலிய ஞாநத்தில், அர்த்தத்தி னுடைய, ஆபத்தி—கற்பனை எதனால் என்னும் அன்மொழித் தொகையினால் பிரவிர்த்திக்கின்றது. ஆகலின், பலம் கரணம் என்னு மிரண்டற்கும் அப் பதப் பிரயோக மாம். அவ் வர்த்தாபத்தியும், திருஷ்டார்த்தாபத்தியும், சுருதார்த்தாபத்தியு மென இரு வகைத் தாம்.

அவற்றுள், திருஷ்டார்த்தாபத்தி—எங்ஙனம்? "இது ரஜதம்" என முன் னிருப்பதில், அறியப்பட்ட ரஜதத்திற்கு, "இது ரஜத மன்று" என ஆண்டே நிஷேதிக்கப்படுந் தன்மை, சத்தியத் தன்மையாயில் பொருந்தாதா மாகலின், ரஜதத்திற்குச் சத்தின் பிந்நத் தன்மை யாகிய சத்தியத் தன்மையின் அத்தியந்தாபாவத் தன்மை ரூப மித்தையாத் தன்மை கற்பிக்கப்படுகின்றது (என்க.)

சுருதார்த்தாபத்தி—எங்ஙனம் கேட்கப்பட்ட வாக்கியத்திற்கு, தன தர்த்தம் பொருந்தாமை முகத்தால் வேறர்த்தம் கற்பிக்கப்படுகின்ற தாம். எங்ஙனம், "சோகத்தினை ஆத்ம வித்துக் கடக்கின்றான்" என்புழி, கேட்கப்பட்ட சோக சப்த வாச்சிய மாய பந்த சமூகத்திற்கு, ஞாந நிவிர்த்தியத் தன்மை பொருந்தாமையால், பந்தத்திற்கு மித்தையாத் தன்மை கற்பிக்கப்படுகின்றது (என்க.) அவ்

லது, எங்ஙனம் "நூறு வருஷம் ஜீவிக்கும் தேவத்தன் கிரகத்தி லில்லை" என்னும் வாக்கியத்தின் சிரவணத்தின் பின், ஜீவிப்பவனுக்குக் கிரகத்தின்கண் ணுள்ள அசத்துத் தன்மை, வெளிச் சத்துத் (இருக்குந்) தன்மையினைக் கற்பிக்கின்றது (என்க.)

சுருதார்த்தாபத்தியும், அபிதாநாநுபபத்தியும், அபிகிதாநுபபத்தியும் என இரு வகைத் தாம். அவற்றுள், யாண்டு வாக்கியத்தின் ஏக தேச சிரவணத்தில், அந்வய அபிதாநம் பொருந்தாமையால், அந்வய அபிதாந உபயோகியாய வேறு பதங் கற்பிக்கப்படுகின்றதோ, ஆண்டு அபிதாந அநுபபத்தி யாம். எங்ஙனம் "துவாரம்" என்புழி, "பிதேகி (மூடு)" என்னும் பதம் அத்தியாகார மாம். அல்லது, எங்ஙனம், "விசுவஜிதா (விசுவஜித் (யாகத்) தால்) யஜேத (வேட்க)" என்புழி, "ஸ்வர்க்க காமன் (துறக்கம் விழைவோன்)" என்னும் பதம் அத்தியாகார மாம்.

அற்றேல், "துவாரம்" என்ப தாதிகளில், அந்வய அபிதாநத்தின் பூர்வம், இவ் வந்வய அபிதாநம், பிதாநத்தினை (சாத்துதலை) த் தோற்றுவிக்கும் பத மின்றிப் பொருத்த மின்று என்னும் ஞாநம் எங்ஙனமா மெனின், அற றன்று, அபிதாந பதத்தினால், காரண வியுற்பத்தியால், தாத்பர்யங் கருதப்படுதலின். ஆகவே, துவாரத்தினைக் கரும மாக வுடைய, பிதாநக் கிரியையின் ஸம்ஸர்க்க பரத் தன்மை, பிதாநத்தினை யுண்டாக்கும் பத மின்றிப் பொருந் தா தென்னும் ஞாநம் ஆண்டும் பொருந்துகின்றது (என்க.)



அபிகித அநுபபத்தியோ, யாண்டு வாக்கியத்தின்கண் ணுள்ள அர்த்த மானது அநுபபந்நத் தன்மையா லறியப் பட்டு, வேறு அர்த்தம் கற்பிக்கப்படுகின்றதோ, ஆண்டு உணரற்பால தாம். எங்ஙனம்? "ஸ்வர்க்க காம: ஜோதிஷ்டோமேந (ஜோதிஷ்டோம (யாக) த்தால்) யஜேத (வேட்க)" என்புழி, க்ஷணிக மாகிய ஜோதிஷ்டோம யாக சம்பந்தத்தால் அறியப்பட்ட ஸ்வர்க்க சாதநத் தன்மை பொருந்தாமையின், மத்திபி லுள்ள அபூர்வங் கற்பிக்கப்படுகின்றது. இவ் வர்த்தாபத்தி, அநுமாநத்தினுள் அடக்க மாதற்கு யோக்கிய மா மென்னற்க; அந்வய வியாப்தி ஞாந மின்மையான், அந்வயி (அநுமாநத்தின்) இடத்து அந்தர்ப் பாவ மன்றாகலின். வியதிரேகிக்கும் அநுமாநத் தன்மை முன்னமே நிவாரணஞ் செய்யப்பட்ட தாம். இதனானே, அர்த்தாபத்தி ஸ்தலத்தில், "அநுமிக்கின்றேன்" என்னு மநுவியவசாய மின்றாம். பின்னரோ, "இதனால் இதனைக் கற்பிக்கின்றேன்" என வாம் (என் றுணர்க)

அற்றேல், அர்த்தாபத்தி ஸ்தலத்தில், "இது இதனா லன்றிப் பொருந்தா தென்னு ஞாநம் காரணம்" எனக் கூறப் பட்டது. ஆண்டு, இது அதனா லின்றிப் பொருத்த மின்மை யாது? (எனின்,) அத னபாவத்திற்கு, வியாபக மான அபாவத்தின் பிரதியோகித் தன்மை யெனப் புகலின்றாம். இங்ஙனம், அர்த்தாபத்திக்கு வேறு பிரமாணத் தன்மை சித்திக்கில், வியதிரேகி வேறு அநுமாந மன்றாம். "பிருதிவி ஏனையவற்றினும் வேறு" என்ப தாதிகளில், "கந்த முடைமை இதர பேத மின்றிப் பொருந்தாது" என்ப தாதி ஞாநத்திற்குக் காரணத் தன்மை யிருத்தலின்.

லது, எங்ஙனம் "நூறு வருஷம் ஜீவிக்கும் தேவத்தன் கிரகத்தி லில்லை" என்னும் வாக்கியத்தின் சிரவணத்தின் பின், ஜீவிப்பவனுக்குக் கிரகத்தின்கண் ணுள்ள அசத்துத் தன்மை, வெளிச் சத்துத் (இருக்குந்) தன்மையினைக் கற்பிக் கின்றது (என்க.)

சுருதார்த்தாபத்தியும், அபிதாநாநுபபத்தியும், அபி கிதாநுபபத்தியும் என இரு வகைத் தாம். அவற்றுள், யாண்டு வாக்கியத்தின் ஏக தேச சிரவணத்தில், அந்வய அபிதாநம் பொருந்தாமையால், அந்வய அபிதாந உபயோகி யாய வேறு பதங் கற்பிக்கப்படுகின்றதோ, ஆண்டு அபிதாந அநுபபத்தி யாம். எங்ஙனம் "துவாரம்" என்புழி, "பிதேகி (மூடு)" என்னும் பதம் அத்தியாகார மாம். அல்லது, எங்ஙனம், "விசுவஜிதா (விசுவஜித் (யாகத்) தால்) யஜேத (வேட்க)" என்புழி, "ஸ்வர்க்க காமன் (துறக்கம் விழைவோன்)" என்னும் பதம் அத்தியாகார மாம்.

அற்றேல், "துவாரம்" என்ப தாதிகளில், அந்வய அபிதாநத்தின் பூர்வம், இவ் வந்வய அபிதாநம், பிதாநத் தினை (சாத்துதலை)த் தோற்றுவிக்கும் பத மின்றிப் பொருத்த மின்று என்னும் ஞாநம் எங்ஙனமா மெனின், அற் றன்று, அபிதாந பதத்தினல், கரண வியுற்பத்தியால், தாத்பர்யங் கருதப்படுதலின். ஆகவே, துவாரத்தினைக் கரும மாக வுடைய, பிதாநக் கிரியையின் ஸம்ஸர்க்க பாத் தன்மை, பிதாநத்தினை யுண்டாகும் பத மின்றிப் பொருந் தா தென்னும் ஞாநம் ஆண்டும் பொருந்துகின்றது (என்க.)



அபிகித அநுபபத்தியோ, யாண்டு வாக்கியத்தின்கண் ணுள்ள அர்த்த மானது அநுபபந்நத் தன்மையா லறியப் பட்டு, வேறு அர்த்தம் கற்பிக்கப்படுகின்றதோ, ஆண்டு உணரற்பால தாம். எங்ஙனம்? "ஸ்வர்க்க காம: ஜோதிஷ் டோமேந (ஜோதிஷ்டோம (யாக) த்தால்) யஜேத (வேட்க)" என்புழி, க்ஷணிக மாகிய ஜோதிஷ்டோம யாக சம்பந்தத்தால் அறியப்பட்ட ஸ்வர்க்க சாதநத் தன்மை பொருந்தாமையின், மத்திபி லுள்ள அபூர்வங் கற்பிக்கப்படுகின்றது. இவ் வர்த்தாபத்தி, அநுமாநத்தினுள் அடக்க மாதற்கு யோக்கிய மா மென்னற்க; அந்வய வியாப்தி ஞாந மின்மையான், அந்வயி (அநுமாநத்தின்) இடத்து அந்தர்ப் பாவ மன்றாக லின். வியதிரேகிக்கும் அநுமாநத் தன்மை முன்னமே நிவாரணஞ் செய்யப்பட்ட தாம். இதனனே, அர்த்தா பத்தி ஸ்தலத்தில், "அநுமிக்கின்றேன்" என்னு மநுவியவ சாய மின்றாம். பின்னரோ, "இதனல் இதனைக் கற்பிக் கின்றேன்" என வாம் (என் றுணர்க)

அற்றேல், அர்த்தாபத்தி ஸ்தலத்தில், "இது இதனை லன்றிப் பொருந்தா தென்னு ஞாநம் காணம்" எனக் கூறப் பட்டது. ஆண்டு, இது அதனை லின்றிப் பொருத்த மின்மை யாது? (எனின்,) அத னபாவத்திற்கு, வியாபக மான அபாவத்தின் பிரதியோகித் தன்மை யெனப் புகல் இன்றாம். இங்ஙனம், அர்த்தாபத்திக்கு வேறு பிரமாணத் தன்மை சித்திக்கில், வியதிரேகி வேறு அநுமாந மன்றாம். "பிருதிவி ஏனையவற்றினும் வேறு" என்ப தாதிகளில், "கந்த முடைமை இதர பேத மின்றிப் பொருந்தாது" என்ப தாதி ஞாநத்திற்குக் காணத் தன்மை யிருத்தலின்.

இதனுனே, "பிருதிவியின்கண் ஏனையவற்றின் பேதத்தினைக் கற்பிக்கின்றேன்" என்னும் அநுவியவசாய மாம் (என்க.)

5 அர்த்தாபத்திப் பரிச்சேத முற்றுப் பெற்றது.

## 6. அநுபலப்திப் பரிச்சேதம்.

இப் பொழுது, ஆறுவது பிரமாணம் நிரூபிக்கப்படுகின்றது. ஞாந கரண அஜந்நிய மாய அபாவ அநுபவ அசாதாரண காரணம் அநுபலப்தி ரூபப் பிரமாண மாம். அநுமாந முதலியவற்று லுண்டாய அதீந்திரிய அபாவ அநுபவத்திற்கு ஹேது வாய அநுமாந முதலியவற்றில் உள்ள, அதிவியாப்தியை நிவிர்த்தித்தற்கு ஞாந கரண அஜந்நியம் என்னும் பதம் (கூறப்பட்ட தாம) சாதாரண காரண மாய அதிர்ஷ்டாதிகளில், அதிவியாப்தியை நிவிர்த்தித்தற்கு அசாதாரணம் என்னும் பதம் (கூறப்பட்ட தாம்.) அபாவ ஸ்மிருதியின் அசாதாரண ஹேது வாய ஸமஸ்காரத் தில் உண்டாம், அதிவியாப்தியினை நிவிர்த்தித்தற் கு அநுபவ மென்னும் விசேஷண மாம். அபாவ அநுமிதி ஸ்தலத்திலும், அநுபலப்தியானே அபாவம் கிரகிக்கட்டும் விசேஷ மின்மையான் என்னற்க; தருமாதிகளின் அநுபலப்தி யிருக்கினும், அத னபாவ நிச்சய மின்மையான், யோக்கி யாநுபலப்திக்கே அபாவத்தைக் கிரகிக்கும் தன்மை யிருத்தலின்.

அற்றேல், இந்த யோக்கியா நுபலப்தி யாது? யோக்கியத் தினது—பிரதியோகியினது, அநுபலப்தியா? அல்லது, யோக்கியத்தில்—அதிகரணத்தில், பிரதியோகியி னுடைய



அநுபலப்தியா? முதல தன்று, ஸ்தம்பத்தில் பிசாசு முதலியவற்றின் பேதத்திற்கு அப்பிரத்தியக்ஷத் தன்மை வருதலின். இரண்டாவ தன்று, ஆத்மாவின்கண் தர்ம முதலியவற்றின் அபாவத்திற்குப் பிரத்தியக்ஷத் தன்மை வருதலின் எனின், அற் றன்று; யோக்கிய மாகிய அநுபலப்தி எனப் பண்புத் தொகை யங்கீகரித்தலான். அநுபலப்திச்கு யோக்கியத் தன்மையும், தர்க்கிதப் பிரதியோகியின் சத்துவத்தால் பிரசஞ்சிக்கப்பட்ட பிரதியோகித் தன்மை யாம். எதன் அபாவங் கிரகிக்கப்படுகின்றதோ, அதன் பிரதியோகி யாது, அதன் சத்துவத்தால், அதிகரணத்தின்கண் தர்க்கத்தால், பிரசஞ்சிக்கப்பட்ட—ஆபாதந யோக்கிய மாய, எந்தப் பிரதியோகியின் உபலப்தி ஸ்வரூபம், எந்த அநுபலம்பத்திற் கிருக்கின்றதோ, அத் தன்மை அவ் வநுபலப்தியின் யோக்கியத் தன்மை யாம; அங்ஙன மன்றே, மிகுந்த பிரகாச முள்ள பூதலத்தில், "கட மிருக்கு மாயின், அப் பொழுது கடந் தோற்றும்" என்னு மாபாதநம் பொருந்துதலின், அவ் வித பூதலத்தில், கடாபாவம் அநுபலப்தியினு லறியத் தக்க தாம். அந்தகாரத்தின்கண்ணே, அவ் வித ஆபாதந மின்மையின், அநுபலப்தியினு லறியப்படுந் தன்மை யின்றும். இதனுனே, ஸ்தம்பத்தில் தாதாத்மிய ஸம்பந்தத்தினுல், பிசாச மிருக்கில், ஸ்தம்பம் போன்று பிரத்தியக்ஷத் தன்மை வருதலின், அத னபாவம் அநுபலப்தியினு லறியப்படுகின்ற தாம். ஆத்மாவின்கண் தர்மாதர்மாதிக ளிருப்பினும், அவை அதீந்திரிய மாகலின், புகன்ற உபலம்ப ஆபாதநம் பொருந்தாமை யால், தர்மாதி யபாவத்திற்கு அநுபலப்தியினு லறியப்படுந் தன்மை யின்றும்.

அற்றேல், புகன்ற ரீதியால், அதிகரணத்திற்கும், இந்திரியத்திற்கும், ஸந்நிகர்ஷ முண்டாம் ஸ்தலத்தில், அபாவத்திற்கு அநுபலப்தியினு லறியப்படுந் தன்மை உனது அங்கீகார மாம்; ஆண்டு நிச்சயிக்கப்பட்ட இந்திரியமே அபாவாகார விருத்தியி னிடத்துங் கரண மாம். இந்திரிய அந்வய வியதிரேகங்களின் அநுவிதாநத்தால் ஆமாலோ வெனின், அற் றன்று; அதன் பிரதியோகி அநுபலப்திக்கும், அபாவத்தினைக் கிரகிக்கும் ஏதுத் தன்மையால் நிச்சயிக்கப்பட் டிருத்தலின், கரணத் தன்மை மாத்திரம் கற்பிக்கப் படுதலான் (என்க.) இந்திரியத்திற்கும் அபாவத்தோடு கூட ஸந்நிகர்ஷ மின்மையால், அபாவத்தினைக் கிரகிக்கும் ஏதுத் தன்மை யின்மையின். இந்திரிய அந்வய வியதிரேகங்கட்கு, அதிகரண ஞாந முதலியவற்றால் நாசமாந் தன்மை யிருத்தலால், அந்நியதா சித்தி யாகலின் (என்க).

அற்றேல், "பூதலத்தில் கட மின்று" என்ப தாதி அபாவ அநுபவ ஸ்தலத்தில், பூதல அம்ஸத்தில் பிரத்தியக்ஷத் தன்மை யிருவருக்குஞ் சித்த மாம். ஆகலின், விருத்தி வெளிச் செல்லல் ஆவசியக மாதலின், ஆண்டு சிந்ந சைதந்யம் போன்று, அதனகண ணுள்ள கட அபாவ அவச்சிந்ந சைதந்யத்திற்கும் பிரமாத்ரு அபிந்நத் தன்மை யிருத்தலின், கடாபாவத்திற்குப் பிரத்தியக்ஷத் தன்மையே, சித்தாந்தத்திலு மாமாலோ வெனின், உண்மை யாம். அபாவப் பிரதீதிக்குப் பிரத்தியக்ஷத் தன்மை யிருப்பினும், அதன் கரண மாய அநுபலப்திக்கு வேறு பிரமாணத் தன்மை யிருத்தலின் (என்க). பல ரூப மான ஞாநத்திற்குப் பிரத்தியக்ஷத் தன்மை யிருக்கில், அதன் கரணத்



திற்குப் பிரத்தியக்ஷப் பிரமாணத் தன்மை யாம் என்னும் நியதத் தன்மை யின்றும். "பத்தாமவன் நீயா யிருக்கின்றாய்" என்ப தாதி வாக்கியத்தினு லுண்டாகும் ஞாநத்திற்குப் பிரத்தியக்ஷத் தன்மை யிருப்பினும், அதன் கரண மாய வாக்கியத்திற்குப், பிரத்தியக்ஷப் பிரமாணத்தினும் வேறாய பிரமாணத் தன்மை யங்கீகரித் திருத்தலான் (என்க).

அற்றேல், பிரயோஜநத்தின் வேற்றுமை யின்றிப் பிரமாண பேதம் எங்ஙன மாமாலோ வெனின், அற் றன்று; விருத்தியின் வேற்றுமை மாத்திரத்தினுல் பிரமாண வேற்றுமை பொருந்துதலின். ஆகவே, கடாபாவாகார விருத்தி இந்திரிய ஜந்நிய மன்றும், இந்திரியத்திற்கு விஷய விசேஷணத்தோடு ஸந்நிகர்ஷ மின்மையின். பின்னரோ, கடத்தின் அநுபலப்தி ரூப வேறு பிரமாணத்தினு லுண்டாய தாம். ஆகலின், அநுபலப்திக்கு வேறு பிரமாணத் தன்மை யிருக்கின்றது (என்க).

அற்றேல், அநுபலப்தி வேறு பிரமாண மென்னும் பக்ஷத்திலும், அபாவ ஞாநத்திற்குப் பிரத்தியக்ஷத் தன்மை யிருக்கு மிடத்துக், கட முடையதன்கண் கடாபாவப் பிராந்திக்கும், பிரத்தியக்ஷத் தன்மை வரு ஞான்று, ஆண்டும் அநிர்வசநீய மான கடாபாவ மங்கீகரிக்குக. இஷ்ட அடைவா மென்னற்க; அதற்கு மாயை உபாதாந மாக வுடைத்தாந் தன்மையில், அபாவத் தன்மை பொருந்தா தாம். மாயை உபதாந மாக வுடைத்தாந் தன்மை யின்மையில், மாயைக்குச் சகல காரிய உபாதாநத் தன்மை பொருந்தாதா மாலோ

வெனின், அற் றன்று; கட முடைய விடத்துக் கடாபாவப் பிராந்தியானது, அக் காலத்தி லுண்டாய கடாபாவத்தினை விஷயமாக வுடைய தன்றும். பின்னரோ, பூதல ரூப முதலியவற்றி லுள்ள லௌகிக கடாபாவம், பூதலத்தி லாரோபிக்கப்படுகின்ற தாம் என அந்நியதாக் கியாதியே ஆம். ஆரோப்பியத்தின் ஸந்நிகர்ஷ ஸ்தலத்தில், யாண்டும் அந்நிய தாக் கியாதியே வியவஸ்தை செய் திருத்தலின். அல்லது, பிரதியோகி யுடையதன்கண் அதன் அபாவப் பிராந்தி ஸ்தலத்தில், அத னபாவத்திற்கு அநிர்வசநீயத் தன்மை யிருக்குக. அங்ஙனமா மாயினும், அத னுபாதாநம் மாயையே யாம். உபாதாந உபாதேயங்கட்கு அத்தியந்தம் சமாந ஜாதி யுடைத்தாந் தன்மை யின்றும். தந்து படங்கட்கும், தந்துத் தன்மை, படத் தன்மை யாதிகளினுல் வேற்றுமைத் தன்மை யுள தாகலின். சில சமாந ஜாதி யுடைத்தாந் தன்மை, மாயைக்கும், அநிர்வசநீய மாய கடாபாவத்திற்கும், மித்தையாத்துவ தர்ம மானது இருத்தலின். இங்ஙனங் கொள்ளாக்கால், வியாவகாரிக மாகிய கடாபாவத்திற்கு, மாயை எங்ஙனம் உபாதாந மாம் என எதனுல் சங்கிக்க வில்லை. விஜாதீயங்கட்கும், உபாதாந உபாதேய பாவத்தில், பிரஹ்மமே ஜகத்திற்கு உபாதாநமா மென்னற்க; பிரபஞ்சப் பிராந்திக்கு அதிஷ்டாநத் தன்மை ரூபத்தால், அது இஷ்டமாகலின். பரிணுமித் தன்மை ரூப உபாதாநத் தன்மைக்கு, நிரவயவ மாகிய பிரஹ்மத்தின்கண் பொருந்தாமையின். ஆகவே, பிரபஞ்சத்தின் பரிணுமி உபாதாநத் தன்மை மாயை யாம்; பிரஹ்ம மன்றும் என்பது சித்தாந்தமாமாகலின், மிகைபடக் கூறலான் வியர்த்த மாம் (என்க).



அவ் வபாவமும், பிராகபாவமும், பிரத்வம்ஸாபாவமும், அத்தியந்தாபாவமும், அந்நியோந்நியாபாவமும் என நான்கு வகைத் தாம். அவற்றுள், மட் பிண்ட முதலிய காரணத்தில், காரிய மாகிய கடா திகளின் உற்பத்திக்குப் பூர்வம் எவ் வபாவ முளதோ, அது பிராகபாவ மாம். அதுவும், "உண்டாம்" என் னும் பிரதீதியின் விஷய மாம்.

ஆண்டே, கடத்திற்கு உலக்கையா லடித்தலின் பின், எவ் வபாவ முள தாமோ, அது பிரத்வம்ஸாபாவ மாம். த்வம்ஸத்திற்கும், தனது அதிகரண மாய கபால நாசத்தில் நாசமே (யுள தாம்). கடம் மீண்டும் உற்பத்தியா மென்னற்க; கட த்வம்ஸத்தின் த்வம்ஸத்திற்கும் கடப் பிரதியோகியினை யுடைய த்வம்ஸத் தன்மை யிருத்தலின். இங்ஙனங் கொள்ளாக்கால், பிராகபாவ த்வம்ஸ ரூப கடத்தின் நாசத்தில், மீண்டும் பிராகபாவ உற்பத்தி யாம். இங்ஙனமாயினும், யாண்டு த்வம்ஸத்தின் அதிகரணம் நித்தியமோ, ஆண்டு த்வம்ஸத்தின் நாச மெங்ஙனமா மென்னற்க; அவ் வித அதிகரணம் சைதந்யத்தினும் அந்நிய மாயின், அப் பொழுது அதற்கு நித்தியத் தன்மை சித்த மன்றும். பிரஹ்மத்திற் கந்நிய மாய வெல்லாவற்றிற்கும் பிரஹ்ம ஞாநத்தினுல் நிவிர்த்திக்கப்படுந் தன்மை புகலப்படுமாகலின். த்வம்ஸத்தின் அதிகரணம் சைதந்யமா மாயின், அப் பொழுது அசித்தி யாம். அதிஷ்டாநத்திற் பிரதீதியாகும் ஆரோபிதத்தினைப் பிரதியோகியாக வுடைய பிரத்வம்ஸத்திற்கு, அதிகரண மாத்திரத் தன்மை யிருத்தலின். அது "கற்பித வஸ்துவின் நாசம் அதிஷ்டாநமாக எஞ்சுத லாம்" எனக் கூறப்பட்டிருக்கின்றது. இங்ஙனம் சுக்தி ரூப்பிய நாசமும் இத மவச்சிந்ந சைதந்ய ரூபமே யாம்.

எவ் வதிகரணத்தில், எதற்குக் காலத் திரயத்திலு மாபாவ முளதோ, அது அத்தியந்தாபாவ மாம். எங்ஙனம் வாயுவின்கண் ரூபத்தின் அத்தியந்தாபாவ மாம். அதுவும், ஆகாசாதி போன்று த்வம்ஸத்தின் பிரதியோகியே யாம்.

"இது இதன்று" என்னும் பிரதீதியின் விஷயம் அந்நியோந்நியாபாவ மாம். இதனையே விபாகம் என்றும், பேத மென்றும், பிருதக்த்வம் என்றும் வியவகரிக்கின்றனர். பேதத்தினும், அந்நிய மாக விபாகாதிகளில் பிரமாண மின்மையான். இந்த அந்நியோந்நியாபாவமும், அதிகரணத் திற்குச் சாதித் தன்மை யிருக்கில், சாதி யாம். எங்ஙனம்? கடத்திற் பட பேத மாம். அதிகரணத்திற்கு அநாதித் தன்மை யிருக்கி லநாதியே யாம். எங்ஙனம்? ஜீவனிடத்துப் பிரஹ்ம பேத மாம். பிரஹ்மத்தினிடத்து ஜீவ பேத மாம். இரு வகைத் தாய பேதமும், த்வஸத்தின் பிரதியோகியே யாம். அவித்தை நிவிர்த்தியாகுங்கால் அதன் பாதந்திர மாயவற்றிற்கும் நிவிர்த்தி யவசிய முள வாகலின். மீண்டும், சோபாதிகமும், நிருபாதிகமு மெனப் பேத மிரு வகைத் தாம். அவற்றுள், உபாதி சத்தையின், வியாப்பிய சத்தை யுடையதாந தன்மை, சோபாதிகத் தன்மை யாம். அஃதின் றிய தன்மை, நிருபாதிகத் தன்மை யாம். அவற்றுள், முத லது எங்ஙனம்? ஒரு ஆகாயத்திற்கே கடாதி யுபாதி பேதத் தினற் பேத மாம். அல்லது, எங்ஙனம்? ஒரு சூரியனுக்கு ஜல பாத்திரத்தின் பேதத்தினற் பேத மாம். எங்ஙனம்? ஒரு பிரஹ்மத்திற்கு அந்தக்கரண பேதத்தினற் பேத மாம்.

நிருபாதிக பேதம் எங்ஙனம்? கடத்திற் பட பேத மாம். பிரஹ்மத்தின்கண்ணும், பிரபஞ்ச பேதம் அங்கீகரிக்



கின், அத்வைத விரோதமா மென்னற்க; தாத்விக பேதத் தை யங்கீகரிக்காமையால், ஆகாசாதிகள் போன்று அத் வைத வியாகாத மின்மையின். அத்வைதப் பிரஹ்மத்தில், பிரபஞ்சத்திற்குக் கற்பிதத் தன்மை அங்கீகரித் திருத் தலின். அது "(பிரஹ்மத்தின்கண்) சாதகத் தன்மையைக் கற்பிப்பதில் உனக்கு இப் பொருமை யாது? ஆண்டே அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட சம்சாரத்தைப் பார்க்க வில்லையா" என்று சுரேசுவராசாரியராற் கூறப்பட்டிருக் கிறது. இதனனேயே, விவரணத்தில், அவித்தையின் அநுமானத்தில், பிராகபாவ வியதிரிக்தத் தன்மை விசேஷண மும், தத்வப் பிரதீபிகையால், அவித்தையா லக்ஷணத்தில், பாவத்வ விசேஷணமும் பொருந்துகின்றது. இவ் வாறு, நான்கு வித மான அபாவங்களினது பிரதீதி, யோக்கியாநு பலப்தியினல் ஆம். ஆண்டு அநுபலப்தி வேறு பிர மாண மாம்.

இவ் வாறு, கூறிய பிரமாணங்களினது பிராமாண்யம் ஸ்வயமாகவே உண்டாகின்றதும், அறியப்படுகின்றதும் ஆம். அங்ஙன மன்றே, ஸ்மிருதி அநுபவங்களின் சாதா ரணமாய் சம்வாதிப் பிரவிர்த்திக்கு அநுகூல மாய, அஃது டையதன்கண் அது விசேஷணமாக நிகழும் ஞானத் தன்மை பிராமாண்ய மாம். அதுவும், ஞாநத்தின் சாமாந்ய மான சாமக்கிரியினைப் பிரயோஜக மாக வுடைய தாம்; அதிக குணத்தினை யபேக்ஷிக்கப்படுவ தின்றும். பிரமை மாத் திரத்தில் அநுகத குண மின்மையால். பிரத்தியக்ஷப் பிரமை யில், அநேக அவயவங்கட்கும், இந்திரியங்கட்கும், ஸந்நி கர்ஷமு மின்றும். ரூபாதிப் பிரத்தியக்ஷத்திலும், ஆத்மப்

பிரத்தியக்ஷத்திலும், அஃதின்மையின். அஃதிருப்பினும், "சங்கு மஞ்சள்" என்னும் பிரத்தியக்ஷத்திற்குப் பிராந்தித் தன்மை யுள வாகலின். இதனுனேயே, சத் லிங்க பராமரிச முதலியனவும், அநுமிதி முதலிய பிரமைக்கண் குணமன்ரும். அசத் லிங்க பராமரிசாதி ஸ்தலத்திலும், விஷய பாத மின்மையான், அநுமிதி முதலியவற்றிற்குப் பிரமாத் தன்மை யுள வாகலின். இங்ஙனம், அப்பிரமையும் பிரமை யாகும், ஞாந சாமாந்ய சாமக்கிரியால் விசேஷ மின்மையி னென்னற்க; தோஷாபாவத்திற்கும், ஏதுத் தன்மை யங்கீ கரித்தலால். இங்ஙனம், பரதஸ்த்வமா மென்னற்க; ஆகந்துக பாவ காரண அபேக்ஷையின்கண்ணேயே பரதஸ்த்வ மாகலின். பிராமாண்யம் ஸ்வயமாக அறியவும் படுகின்றது. ஸ்வதக் கிராகியத் தன்மையும், தோஷாபாவத்தோடு கூடிய எல்லா ஸ்வாசிரயத்தினைக் கிரகிக்கும் சாமக்கிரியாற் கிரகிக் கப்படுந் தன்மை யாம். ஸ்வாசிரயம் விருத்தி ஞாந மாம். அதனைக் கிரகிப்பது சாக்ஷி ஞாந மாம். அதனுலும், விருத்தி ஞாநங் கிரகிக்கப்படுங்கால் அதன்கண் ணுள்ள பிராமாண்யமுங் கிரகிக்கப்படுகின்றது.

இங்ஙன மாயின், பிராமாண்ய சம்சயம் வாரா தென் னற்க; ஆண்டுச் சம்சயத்தின் அநுரோதத்தால் தோஷமு மிருத்தலான், தோஷாபாவத்தோடு கூடிய ஸ்வாசிரயத் தினைக் கிரகிக்குந் தன்மை யின்மையால், ஆண்டுப் பிரா மாண்யமே கிரகிக்கப்படாமையின் (என்க).

அல்லது எவ்வளவு ஸ்வாசிரயத்தினைக் கிரகிப்பதால் கிரகிக்கப்படுந் தன்மை யாகிய யோக்கியத் தன்மை, ஸ்வதஸ்த்வ மாம். சம்சய ஸ்தலத்தில், பிராமாண்யத்திற்குப் புகன்ற யோக்கியத் தன்மை யிருப்பினும், தோஷவசத் தினுல் கிரகிக்கப்படாமையின், சம்சயப் பொருத்த மின்மை யின்ரும். அப்பிராமாண்யமோ, ஞாந சாமாந்ய சாமக்கிரி யின் பிரயோஜக மாக உடைய தன்ரும். பிரமையின்கண் ணும், அப்பிராமாண்யத் தன்மை வருதலின். பின்னரோ, தோஷப் பிரயோஜ்ஜிய மாம். அப்பிராமாண்யமும், எவ் வளவு ஸ்வாசிரயத்தினைக் கிரகிப்பதால் கிரகிக்கப்படுவ தன்ரும். அப்பிராமாண்யத்தின்கண் ணுள்ள அதன் அபாவ முடைமை முதலியவற்றிற்கு விருத்தி ஞாநத்தால் கிரகிக்கப்படாமையான், சாக்ஷியினுற் கிரகிப்பதற்குச் சமர்த் தன்ருகலின். பின்னையோ, விஸம்வாதிப் பிரவிர்த்தி முத லிய லிங்கத்தினை யுடைய அநுமிதி முதலியவற்றிற்கு விஷய மாம். ஆகலின், அப்பிராமாண்யம் அந்நியத்தானே உற் பத்தியு மாகின்றது அறியவும் படுகின்றது.

6. அநுபலப்திப் பரிச்சேத முற்றுப் பெற்றது.

## 7. விஷய பரிச்சேதம்.

இவ் வாறு, நிரூபிக்கப்பட்ட பிரமாணங்களினது பிரா மாண்யம், வியாவகாரிக தத்துவத்தினைப் போதிக்குந் தன் மையும், பாரமார்த்திக தத்துவத்தினைப் போதிக்குந் தன் மையு மென இரு வகைத் தாம். அவற்றுள், பிரஹ்ம ஸ்வ ரூபத்தினைக் கிரகிக்கும் பிரமாணத்தினு மந்நிய மான எல் லாப் பிரமாணத்திற்கும், முதலாவ தாய பிராமாண்ய மாம். அதன் விஷயங்கட்கு வியவகார தசையிற் பாத மின்மை

யின். இரண்டாவதோ, ஜீவப் பிரஹ்மைக்கிய பர மாய "ஹே சௌமிய சிருஷ்டிக்குப் பூர்வம் இவ் வெல்லா ஜகத்தும் சத்தாகவே யிருந்தன" என்ப தாதிகட்கும், "தத்வமசி" என்பது பரியந்தங்கட்கு மாம். அதன் விஷய மாய ஜீவ பர ஐக்கியம், காலத் திரயத்திலும் பாதிக்கப்படாமையின். அவ் வைக்கியமும், தத்வம் பதார்த்த ஞாநாதீந ஞாநமா மாகலின், முதலில் தத் பதார்த்தம், லக்ஷணப் பிரமாணங்களா னிரூபிக் கப்படுகின்றது.

அவற்றுள். ஸ்வரூப லக்ஷணமுந், தடத்த லக்ஷணமு மென லக்ஷணம் இரு வகைத் தாம். அவற்றுள், ஸ்வரூபமே லக்ஷணம் ஸ்வரூப லக்ஷண மாம். எங்ஙனம்? சத்திய முதலியன பிரஹ்ம ஸ்வரூப லக்ஷண மாம். "சத்தியம், ஞாநம், அநந்தம், பிரஹ்மம்", "ஆநந்தம் பிரஹ்ம மென அறிந்தார்கள்" என்பன வாதி சுருதிகளால்.

அற்றேல், ஸ்வரூபத்திற்கு ஸ்வ விருத்தித் தன்மை யின்மையால், லக்ஷணத் தன்மை எங்ஙனமா மாலோ வெனின், அற் றன்று, தனக்கே தன தபேக்ஷையால் தர்ம தர்மி பாவ கற்பனையால், லக்ஷிய லக்ஷணத் தன்மை பொருந்து தலின். அது "ஆநந்தமும், விஷயா நுபவமும், நித்தியத் தன்மையு மெனத் தர்மங்க ளிருக்கின்றன. வேறாகா திருப்பினும், சைதந்யத்தினின்றும், வேறு போன்று விளங்குகின்றன" என்று கூறப்பட்டிருக்கின்றது.

தடஸ்த லக்ஷண மாவது, எது லக்ஷிய காலம் வரை இராது, வியாவர்த்தக மாகின்றதோ, அதுவே யாம். எங் ஙனம்? கந்த முடைமை பிருதிவியின் லக்ஷண மாம். மஹாப்



பிரளயத்திற் பரமாணுக்களிலும், உற்பத்தி காலத்திற் கடாதிகளிலும், கந்த மின்மையான் (என்க.) பிராகிருதத் திலும், ஜகஜ் ஜந்மாதி காரணத் தன்மை (லக்ஷண மாம்). ஈண்டு ஜகத் பதத்தினால், காரிய சமூகம் கிரகிக்கற்பாற் றும். காரணத் தன்மையுங் கருத்திருத்வ மாம். இதனா லவித் தை முதலியவற்றி லதிவியாப்தி யின் றும்.

கருத்திருத்வமும், அதன் உபாதாநத்தைத் கோசரிக் கும் அபரோக்ஷ ஞாந, சிகீர்ஷை, கிருதி யுடைமை யாம். ஈசுவரனுக்கு உபாதாநத்தைக் கோசரிக்கும் அபரோக்ஷ ஞாந முள தென்பதன்கண்ணும், "எவன் சர்வஞ்ஞன், சர்வத் தையு மறிபவன், எவனுக்கு ஞாந மயம் தவ மாம். அதனின் றும், இந்தப் பிரஹ்மாவும், நாமமும், ரூபமும் அந்நமு முண்டாயின" என்ப தாதி சுருதி பிரமாண மாம். அவ் வித சிகீர்ஷை யிருப்பதன்கண்ணும், "அஃது அநேக பிரஜை களாவே னெனச் சங்கற்பித்தது" என்ப தாதி சுருதி பிரமாண மாம். அவ் வித கிருதியிலும், "அது மநதைச் சிருஷ்டித்தது" என்ப தாதி வாக்கியம் (பிரமாண மாம்).

ஞாநம், இச்சை முதலியவற்றின் அந்நிய தமத்தினைக் கர்ப்ப மாகக் கொண்ட லக்ஷண மூன் றென்பது கருத் தாம். இங்ஙனங் கொள்ளாக்கால், வியர்த்த விசேஷணத் தன்மை வருதலின். இதனானேயே, ஜந்ம ஸ்திதி த்வம்ஸங்களின் அந்நிய தமத்திற்கே லக்ஷணத்திற் பிரவேச மாம். ஆகவே, லக்ஷணங்கள் ஒன்பது சம்பவிக்கின்றன.

பிரஹ்மத்திற்கு ஜகஜ் ஜந்மாதி காரணத் தன்மையிலும், "எதனினின் றும் இப் பூதங்க ளுண்டாகின்றன. எதனால்

உண்டாய பூதங்கள் ஜீவிக்கின்றன, பிரளயத்தில் எதன் கண் லயத்தை யடைகின்றன" என்ப தாதி சுருதி பிரமாண மாம். அல்லது, சகல ஜகத்திற் குபாதாநத் தன்மை பிரஹ்மத்திற்கு லக்ஷண மாம். உபாதாநத் தன்மையும், ஜகத்தி னத்தியாசத்திற் கதிஷ்டாநத் தன்மை யாம்; அல்லது, ஜக தாகாரமாகப் பரிணமிக்கும் மாயையி னதிஷ் டாநத் தன்மை யாம். இவ் வாருய உபாதாநத் தன்மை யினைக் கருதியே, "இவ் வெல்லாம் இந்த ஆத்மாவே", "சத்தும் (பிருதிவி, அப்பு, தேயுவும்) த்யத்தும் (வாயு, ஆகாசமும்) ஆய்விட்டன", "அநேக பிரஜைகளாவோம்" என்பன வாதி சுருதிகளில், பிரஹ்மத்திற்கும், பிரபஞ் சத்திற்கும் தாதாத்மியங் கூறப்படுகின்றது. "கட மிருக்கின்றது, கடம் விளங்குகின்றது கடம் இஷ்டம்" என்ப தாதி லௌகிக வியபதேசமும், சச்சிதாநந்த ஸ்வ ரூபப் பிரஹ்மத்தின் ஐக்கியாத்தியாசத்தினு லாம்.

அற்றேல், ஆநந்த ரூபச் சித்தி னத்தியாசத்தினுல், கடாதிகட்கே இஷ்டத் தன்மை வியவகார மிருப்பில், துக்க மும் ஆண் டத்தியஸ்த மாகலின், அதற்கும் இஷ்டத் தன்மை முதலிய வியவகாரம் வரு மாலோ வெனின், அற் றன்று; ஆரோபித மிருக்குங்கால் நிமித்தத்தி னநுசரண மாம். நிமித்த மிருப்பதால் ஆரோப மன் ருறும் என அங்கீகரித் திருத்தலின், துக்கரதிகளில் சத்து சித்து அம்ஸங்கள் அத்தியாசமா யிருப்பினும், ஆநந்தாம்ஸம் அத் தியாச மன் ருகலின் (என்க). ஜகத்தின்கண் நாம ரூப அம்ஸ மிரண்டின் வியவகாரமோ, அவித்தையின் பரிணும ரூப மாய, நாம ரூப சம்பந்தத்தினு லாம். அது "அஸ்தி



பாதி பிரியம் ரூபம் நாமம் என ஐந் தம்ஸங்க ளுள, முன் மூன்றும் பிரஹ்ம ரூப மாம். பின் னிரண்டும் ஜகத் ரூப மாம்" எனக் கூறப்பட்டிருக்கின்றது.

ஜகத்தின் உற்பத்திக் கிரமம் நிரூபிக்கப்படுகின்றது. ஆண்டுச் சிருஷ்டியின் முதற் காலத்தில், சிருஷ்டிக்கப்படும் பிரபஞ்ச விசித்திரத் தன்மைக் கேது வய பிராணிகளின் கருமத்தோடு கூடிய பரமேசுவரன், அள விடக் கூடாததும், நிரூபிக்கக் கூடாதது மாய சக்தி விசேஷத்தோடு கூடிய மாயையோடு கூடினவனுய், நாம ரூபாத்மக மாய சகல பிரபஞ்சத்தையும், முதலிற் புத்தியின்க ணிச்சயித்து, "இதனைச் செய்வேன்" எனச் சங்கற்பிக்கின்றுன். "அது வெகு பிரஜைக ளாவோ மென ஈக்ஷித்தது", "அது வெகு பிரஜைக ளாவோ மெனச் சங்கற்பித்தது" என்பன வாதி சுருதிகளால். அதனுல், தன் மாத்திரை யென்னும் பதத் தாற் கூறப்படும் அபஞ்சீகிருத மாய ஆகாசாதி பஞ்ச பூதங்க ளுண்டாகின்றன. அவற்றுள், ஆகாசத்திற்குச் சப்தம் குண மாம். வாயுவிற்குச் சப்த ஸ்பரிசங்க ளாம். தேஜஸிற்குச் சப்த ஸ்பரிச ரூபங்க ளாம். ஜலத்திற்குச் சப்த ஸ்பரிச ரூப ரஸங்க ளாம். பிருதிவிக்குச் சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தங்க ளாம். சப்தத்திற்கு ஆகாய மாத்திர குணத் தன்மை யன்றும்; வாயு முதலியவற்றி னும் அது தோற்றுதலின். இது பிராந்தி யன்றும், பாதக மின்மையின். இப் பூதங்கள் முக் குண மாகிய மாயையின் காரியங்க ளாம், முக் குணங்க ளாம். குணங்கள் — சத்துவ ரஜஸ் தமஸங்க ளாம். இந்த வியஷ்டி சத்துவ குணத்தோடு கூடிய பஞ்ச பூதங்களால், கிரமமாகச் சுரோத்

திரம் த்வக்கு சக்ஷு ரஸநம் கிராணம் என்னும் பெயரினை யுடைய பஞ்சேந்திரியங்க ளுண்டாகின்றன. இந்தச் சமஷ்டி சத்துவ குணத்தோடு கூடிய பஞ்ச பூதங்களாலேயே மநம் புத்தி அகங்காரம் சித்தம் (என்னும் பெயரினை யுடைய அந்தக் கரணம்) உண்டாகின்றன. சுரோத்திர முதலிய ஐந்திற்கும், கிரமமாகத் திக்கு வாதம் அர்க்கன் வருணன் அசுவிநி அதிஷ்டாத்திரு தேவதைக ளாம். மந முதலியவற்றிற்குக் கிரமமாகச் சந்திரன் சதுர் முகன் சங்கரன் அச்சுதன் என்பவர் அதிஷ்டாத்திரு தேவ ராவர்.

இந்த வியஷ்டி ரஜோ குணத்தோடு கூடிய பஞ்ச பூதங்களாலேயே, கிரமமாக வாக் பாணி பாத பாயு உபஸ்தம் என்னும் பெயரினை யுடைய கர்மேந்திரியங்கள் உண்டாகின்றன. அவற்றிற்கும், கிரமமாக வந்நி இந்திரன் உபேந்திரன் மிருத்யு பிரஜாபதி அதிஷ்டாத்திரு தேவதைகளாம். இநதச் சமஷ்டி ரஜோ குணத்தோடு கூடிய பஞ்ச பூதங்களாலே, பிராணன் அபாநன் வியாநன் உதாநன் சமாநன் எனனும் பெயரினை யுடை பஞ்ச வாயுக்க ளுண்டாகின்றன. அவற்றுள், மே னோக்கிச் செல்லும் வாயு பிராண னும், நாசி முதலிய விடத்தி லிருப்ப தாம். கீழ்ச் செல்லும் வாயு அபாந னும், பாயு முதலிய ஸ்தாநங்களி லிருப்ப தாம். சரீர மெங்குஞ் செல்லும் வாயு வியாந னும், சகல சரீரத்திலு மிருப்ப தாம். உயரச் செல்லும் உத்கிரமண வாயு உதாந னும், அது கண்ட ஸ்தாநத்தி லிருப்ப தாம். உண்டல் குடித்த லாதி அந்ந முதலியவற்றைச் சமஞ் செய்வது சமாந னும், நாபி ஸ்தாநத்தி லிருப்ப தாம்.



அந்தத் தமோ குணத்தோடு கூடிய அபஞ்சீகிருத பூதங்களால், பஞ்சீகிருத பூதங்க ளுண்டாகின்றன. "அவற்றுள், ஒன் றொன்றை மூன்றாகச் செய்வேன்" என்னுஞ் சுருதி, பஞ்சீகரணத்திற்கும் உபலக்ஷணார்த்த முடையதா யிருத்தலின். பஞ்சீகரணப் பிரகாரமு மிங்ஙன மாம் — ஆகாசத்தை முதலில் இரண்டாகப் பகுத்து, அவற்று ளொரு பாகத்தினை மீண்டும் நான்காகப் பகுத்து, அந்த நான்கு அம்ஸங்களை வாயு முதலியவற்றில் நன்கு சேர்த்தலாம். இவ் வாறு, வாயுவினை இரண்டாகப் பகுத்து, அவற்று ளொரு பாகத்தினை, மீண்டும் நான்காகப் பகுத்து, அந்த நான் கம்ஸங்களை, ஆகாச முதலியவற்றிற் சேர்த்தலாம். இவ் வாறு, அக்கினி முதலியவற்றிற்கு மாம். இவ் வாறே, ஒவ் வொரு பூதத்தின் அரைப் பாகம், தன தம்ஸ ரூபமும், மற்று மரைப் பாகம் நான்கு வித பூத ரூபமு மாமாகலின், பிருதிவி முதலியவற்றில், தன தம்ஸ அதிகத் தன்மையால், பிருதிவி முதலிய வியவகார மாம். அது "விசேஷியத்தால் அதன் வாதம் அதன் வாதம்" என்று (பிரஹ்ம சூத்ரத்தில்) கூறப்பட்டிருக்கின்றது.

அந்த அபஞ்சீகிருத பூதத்தினின்றும் பரலோக யாத்திரையினை நிர்வகிப்பதாய், மோக்ஷ பரியந்தம் இருப்பதாய், மநம் புத்திகளோடு கூடியதாய், ஞாநேந்திரிய பஞ்சகம், கர்மேந்திரிய பஞ்சகம், பிராணாதி பஞ்சகங்களோடு கூடிய, லிங்க சரீர முண்டாகின்றது. அது "பஞ்சப் பிராணன் மநம் புத்தி பத் திந்திரியங்களோடு கூடி அபஞ்சீகிருத பூதத்தினின்று முண்டாய சூக்ஷ்ம சரீரம் போக சாதந மாம்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

அதுவும், பரமும், அபரமு மென இரு வகைத் தாம். பரம் ஹிரண்யகர்ப்பனது லிங்க சரீர மாம். அபரம் நம் முதலியோரது லிங்க சரீர மாம். அவற்றுள், ஹிரண்ய கர்ப்பரது லிங்க சரீரம் மஹதத்வ மாம். நம் முதலியோரது லிங்க சரீரம் அகங்கார தத்வ மாம் எனக் கூறப்படுகின்றது.

இவ் வாறு, தமோ குணத்தோடு கூடிய பஞ்சீகிருத பூதங்களினின்றும், பூமி அந்தரிக்ஷ ஸ்வ மஹ ஜந தப சத்தியம் என்னும் பெயரை யுடைய ஊர்த்துவ லோகம் ஏழினை யுடையதும், அதல பாதாள விதல சுதல தலாதல ரஸாதல மஹாதலம் என்னும் பெயரினை யுடைய அதோ லோகம் ஏழினை யுடையது மாய பிரஹ்மாண்டத்தின தும், சராயுஜம் அண்டஜம் சுவேத்ஜம் உத்பிஜ்ஜம் என்னும் பெயரினை யுடைய நான்கு வித ஸ்தூல சரீரங் களினதும் உற்பத்தி யாம். அவற்றுள், சராயுஜங்கள் சராயுக் (பை) களினின்றுஞ் சநித்தந வாகிய மநுஷ்ய பசு வாதி சரீரங்க ளாம். அண்டஜங்கள், அண்டங் (முட்டை) களினின்றும் ஜநித்தந வாகிய பக்ஷி பந்நக முதலியவற்றின் சரீரங்க ளாம். ஸ்வேதஜங்களோ ஸ்வேதத்தி (வியர்வையி) னின்றும் உண்டாவன வாய, பேன் கொதுகு முதலியன வாம். உத்பிஜ்ஜங்களோ, பூமியினை உத்பித்துக் (பிளந்து) கொண்டு பிறந்தன வாய, விருக்ஷ முதலியன வாம். விருக்ஷாதி கட்கும் பாவ பல போகத்தின் அயதநத் தன்மையால் சரீரத் தன்மை யாம். ஈண்டுப், பரமேசுவரனுக்குப் பஞ்ச தன் மாத்திரை முதலியவற்றி னுற்பத்தியிலும்; பதி னேழு அவயவத்தோடு கூடிய லிங்க சரீரத்தி னுற்பத்தியிலும், ஹிரண்யகர்ப்பனது ஸ்தூல சரீரத்தி னுற்பத்தியிலும்,



சாக்ஷாத் கர்த்திருத் தன்மை யாம். ஏனைய சகல பிரபஞ்சத் தின் உற்பத்தியில், ஹிரண்யகர்ப்பர் முதலியோர் வாயிலா யாம். "இம் மூன்று தேவதைகளை யான் சிருஷ்டித்து, இந்த ஜீவ ரூபத்தினுற் பிரவேசித்து, நாம ரூபங்களை வியாகரணஞ் செய்வேன்" என்னுஞ் சுருதியினுல்.

ஹிரண்யகர்ப்பர், மும் மூர்த்திகளினின்று மந்நியமாய்ப் பிரதம ஜீவ ராவர். "அவர் சரீரி, அவன் புருஷ னென்று புகலப்படுகின்றுன்", "அவன் பூதங்கட்கு ஆதி கர்த்தா, சிருஷ்டிக்கு முன் பிரஹ்மா இருந்தார்", "சிருஷ்டிக்குப் பூர்வம் ஹிரண்யகர்ப்ப ரிருந்தார்" என்பன வாதி சுருதிக ளால். இவ் வாறு, பூத பௌதிகங்களின் சிருஷ்டி நிரூபிக்கப் பட்ட தாம்.

இப் பொழுது, பிரளயம் நிரூபிக்கப்படுகின்றது. பிரளய மென்பது மூன்று லோகத்தின் நாச மாம். அது, நித்திய மும், பிராகிருதமும், நைமித்திகமு ஆத்யந்திகமு மென நான்கு வகைத் தாம். அவற்றுள், நித்தியப் பிரளயம் சுழுத்தி யாம். அது சகல காரியப் பிரளய ரூபமா யிருத்தலின்; தர்மாதர்ம பூர்வ சமஸ்காரங்களும் அப் பொழுது காரண ரூபமா யிருக்கின்றன. அதனுல், உறங்கி விழித்தோனுக் குச் சுக துக்காதி பொருந்தா தென்ப தின்றும். அல்லது, ஸ்மரணுநுபபத்தியு மின்றும். சுழுத்தியின்கண் அந்தக் கரணத்திற்கு நாச முள தாகலின்; அத னதீநமான பிரா ணுதிக் கிரியைகளி னநுபபத்தியு மின்றும். உண்மையாகச் சுவாசாதி யில்லாவிடினும், அதன் தோற்றம் தூங்குபவனது சரீரத் தோற்றம் போன்று, வேறு புருஷனது பிராந்தி

மாத்திர மாகலின். இங்ஙன மாயின், தூங்குபவனுக்குப் பரேதத்தினின்றும் விசேஷ மின்றென்ப தின்று, தூங்குபவனது லிங்க சரீரம் சமஸ்கார ரூபமாக ஆண்டே யிருக்கின்றது. இறந்தவனதோ, லோகாந்தரத்தில் (இருக்கின்றது.) ஆகலின், விலக்ஷணத் தன்மை யிருத்தலின் (என்க.)

அல்லது, அந்தக் கரணத்திற்கு ஞாந சத்தியுங், கிரியா சத்தியு மென இரண்டு சத்திகள் உள வாம். அவற்றுள், ஞாந சத்தி விசிஷ்ட அந்தக்கரணத்திற்குச் சுழுத்தியின்கண் நாச மாம். கிரியா சத்தி விசிஷ்டத்திற்கு (நாசம்) இன்றும். ஆகலின், பிராணாதிகளின் இருப்பு விருத்த மன்றும். கூறிய சுழுத்தியின்கண், "எப்பொழுது தூங்குகின்றவன் ஒரு ஸ்வப்நத்தையும் காண்ப தில்லை, அப் பொழுது இந்தப் பிராணனில் ஒன்றாகின்றது, இதனை எல்லா நாமங்களோடு கூட வாக்கு அடைகின்றது", "ஹே! சௌம்ய! அப்பொழுது சத்தோடு கூட சம்பன்ன னாகின்றான், தன்னை அடைந்து விடுகின்றான்" என்பன வாதி சுருதிகள் பிரமாண மாம்.

பிராகிருதப் பிரளயமோ, காரியப் பிரஹ்மத்தின் நாசத்தினை நிமித்தமாக வுடைய சகல காரியங்களி னாச மாம். எப்பொழுது முன்னரே உற்பத்தி யாய பிரஹ்ம சாக்ஷாத்காரத்தை யுடைய காரியப் பிரஹ்மத்திற்கு, பிரஹ்மாண்ட அதிகார லக்ஷண பிராரப்த கருமத்தின் சமாப்தி காலத்தில், விதேக கைவல்ய ரூப பரம முத்தியாமோ, அப் பொழுது உற்பத்தி யாய பிரஹ்ம சாக்ஷாத்காரத்தினை யுடைய அந்த லோக வாசிகட்கும், பிரஹ்மாவினோடு விதேக கைவல்ய



மாம். "பிரஹ்மாவோடு கூட அந்த லோக வாசிகளெல்லோரும் பிராகிருதப் பிரளயம் பிராப்தமாங்கால் ஹிரண்யகர்ப்பாது முத்தி யவஸ்தையில் சாக்ஷாத்கார முடையவர்களாய்ப் பரம பதத்தினை யடைகின்றனர்" என்னுஞ் சுருதியால். இவ் வாறு, அந்த லோக வாசிகளோடு கூடக் காரியப் பிரஹ்மம் மோக்ஷத்தினை யடையுங்கால், அதனால் அதிஷ்டிக்கப்பட்ட பிரஹ்மாண்டத்தி னுள்ளிருக்குஞ் சகல லோகங்களும், அத னுள் ளிருக்கும் விருக்ஷாதிகளும், பௌதிகங்களும், பூதங்களும், பிரகிருதி யாகிய மாயையில் லய மாம்; பிரஹ்மத்தின்கண் ணன்றும். பாத ரூப நாசமே பிரஹ்மத்தின்கண் ணுள தாகலின். இதனால், பிராகிருத லய மென்று கூறப்படுகின்றது.

காரியப் பிரஹ்மத்தின் பகல் முடிவின் நிமித்த மாய் மூன்று லோகங்கள் மாத்திரம் லயமாவது நைமித்திகப் பிரளய மாம். பிரஹ்மாவின் பகலும், ஆயிரஞ் சதுர் யுக வளவினை யுடைய கால மாம். "ஆயிரஞ் சதுர் யுகம் பிரஹ்மாவின் றிந மெனக் கூறப்படுகின்றது" என்னும் வசநத்தினால், பிரளய காலம் பகற் கால வள வாம். இராத்திரி காலம் பகற் காலத்திற்குச் சமாந மாகலின். பிராகிருதப் பிரளயத்திலும், நைமித்திகப் பிரளயத்திலும், புராண வசநங்கள் பிரமாணங்க ளாம். "பரமேஷ்டி யாகிய பிரஹ்மாவிற்கு இரண்டு பரார்த்தங்கள் முடியுங் காலத்து ஏழு பிரகிருதிகள் பிரளயத்தின் பொருட்டுக் கற்பிக்கப்படுகின்றன. ஹே! ராஜாவே! இது பிராகிருதப் பிரளய மாம். யாண்டு லயத்தை யடைகின்றது" என்னும் வசநம் பிராகிருதப் பிரளயத்திற் பிரமாண மாம். "யாண்டு பிரஹ்மா வானவர் சகலத்தை

யும் ஸ்வாதீநப்படுத்திக் கொண்டு நித்தியம் அநந்தாசநத்தில் சயநித்துக் கொள்ளுகின்றாரோ, இது நைமித்திகப் பிரளய மெனக் கூறப்படுகின்றது" என்னும் வசநம் நைமித்திகப் பிரளயத்திற் பிரமாண மாம்.

நான்காவது பிரளயமோ, பிரஹ்ம சாக்ஷாத்கார நிமித்த மாய்ச் சர்வ மோக்ஷ மாம். அதுவும், ஏக ஜீவ வாதத்தி லொரே காலத்தி லாம். நாநா ஜீவ வாதத்திற் கிரம மாக வாம். "எல்லோரும் ஒன்ருகின்றனர்'' என்ப தாதி சுருதி யால் (என்க.) அவற்றுள், முன் மூன்று பிரளயமும் கர்ம வொழிவின் நிமித்தங்க ளாம். நான்காவதோ, ஞாந முண் டாவத னிமித்தமாய், அஞ்ஞாநத்தோடு கூடவே யாம் என்பது விசேஷ மாம். இவ் வாறு, நான்கு விதப் பிரளய மும் நிரூபிக்கப்பட்ட தாம்.

இப்பொழுது, அதன் கிரமம் நிரூபிக்கப்படுகின்றது. பூதங்களினதும், பௌதிகங்களினதும் லயம், காரண லயக் கிரம மாக வன்ரும். காரண லய சமயத்தில், காரியங்கட்கு ஆசிரய மின்றி யிருத்தல் பொருந்தாமையின். பின்னரோ, சிருஷ்டிக் கிரமத்தின் விபரீதக் கிரம மாக ஆம். அவ் வக் காரிய நாசத்தில், அவ் வவற்றினை யுண்டாக்கும் அதிர்ஷ்ட நாசத்திற்கே பிரயோஜகத்தால், உபாதாந நாசத்திற்குப் பிரயோஜகத் தன்மை யின்மையின். இங்ஙனங் கொள்ளாக் கால், நியாய மதத்திலும், மஹாப் பிரளயத்தில், பிருதிவி பரமாணுக்களி லுள்ள, ரூபம் கந்தம் ரஸ முதலியவற்றிற்கு நாச மின்மை வருதலின். ஆகவே, பிருதிவிக்கு அப்புவி லும், அப்புவிற்குத் தேஜஸிலும், தேஜஸிற்கு வாயுவிலும்,



வாயுவிற்கு ஆகாசத்திலும், ஆகாசத்திற்கு ஜீவ அகங்காரத் திலும், அதற்கு ஹிரண்யகர்ப்பாகங்காரத்திலும், அதற்கு அவித்தையிலும் என் றிவ் வாறே பிரளய மாம். அது விஷ்ணு புராணத்தில், "ஜகத் பிரதிஷ்டையினை யுடைய ஹே! தேவரிஷியே! ஹே! பிரஹ்மன்! பிருதிவி அப்புவில் லயத்தை யடைகின்றது, ஜலம் அக்கினியில் லயத்தை யடை கின்றது, அக்கினி வாயுவில் லயத்தை யடைகின்றது, வாயு ஆகாசத்தில் லயத்தை யடைகின்றது, அது அவ்வியத்தத் தில் லயத்தை யடைகின்றது. அவ்வியத்தம் நிஷ்கள மாகிய புருஷனிடத்து லயத்தை யடைகின்றது'' என்று கூறப் பட்டிருக்கின்றது.

இவ் வாருய, பிரளய காரணத் தன்மை, தத் பதார்த்த மாகிய பிரஹ்மத்திற்குத் தடஸ்த லக்ஷண மாம்.

அற்றேல், வேதாந்தங்களால் பிரஹ்மத்தின்கண் ஜகத் காரணத் தன்மையாற் பிரதிபாதிக்கப்படுங்கால் ஸப்பிரபஞ் சம் பிரஹ்ம மாகும். இங்ஙனங் கொள்ளாக்கால், சிருஷ்டி வாக்கியங்கட்கு அப்பிராமாண்யத் தன்மை வரு மாலோ வெனின், அற் றன்று; சிருஷ்டி வாக்கியங்கட்குச் சிருஷ்டி யின்கண தாத்பர்ய மன்ரும்; பின்னையோ, அத்வைதப் பிரஹ்மத்தின்கண்ணே யாம். அதன் ஞாநத்தின்கண் சிருஷ்டியின் உபயோகம் யாங்ஙன மெனின்? இங்ஙன மாம். சிருஷ்டியினை உபந்நியாசஞ் செய்யாது, பிரபஞ்சத்தின் நிஷேதம் பிரஹ்மத்தின்கண் எப்பொழுது பிரதிபாதிக்கப் படுகின்றதோ, அப்பொழுது பிரஹ்மத்தின்கண் நிஷேதம் பண்ணப்பட்ட பிரபஞ்சத்திற்கு, வாயுவின்கண் நிஷேதிக்கப்

பட்ட ரூபத்திற்குப் போன்று, பிரஹ்மத்தி னின்று மந்நிய விடத்தி லிருத்தலா மென்னுஞ் சங்கையில், சம்சய மின்றிய அத்விதீயத் தன்மை பிரதிபாதிக்கப்பட்ட தன்றும். அதனால், சிருஷ்டி வாக்கியத்தால் பிரஹ்ம உபாதே (காரி) யத் தன்மை னாக மிருக்குங்கால், உபாதான மின்றிக் காரியத்திற்குப் பிறுண்டு இருக்குந் தன்மைச் சங்கையை நிவாரணஞ் செய் திருத்தலின். "ஈதன்று ஈதன்று" என்ப தாதியால், பிரஹ்மத்தின்கண்ணும், அதன் அசத்துத் தன்மையினைக் கூறுமிடத்துப், பிரபஞ்சத்திற்குத் துச்சத் தன்மை யறியப்படில், சகல த்வைதப் பிராந்தி யற்ற அகண்ட சச்சிதானந்த ஏக ரஸ மாகிய பிரஹ்மம் சித்திக்கின்றதா மாகலின், பரம் பரையாகச் சிருஷ்டி வாக்கியங்கட்கு அத்விதீயப் பிரஹ்மத்தின்கண்ணே தாத்பர்ய மாம்.

உபாசநாப் பிரகரணத்திற் படிக்கப்பட்ட சகுணப் பிரஹ்ம வாக்கியங்கட்கு, உபாசநா விதியினா லபேக்ஷிக்கப்பட்ட குணங்களின் ஆரோப மாத்திர பரத் தன்மை யாம். குண பரத் தன்மை யன்றும். நிர்க்குணப் பிரகரணத்திற் படிக்கப்பட்ட சகுண வாக்கியங்கட்கோ, நிஷேத வாக்கியத்தினா லபேக்ஷிக்கப்பட்ட நிஷேதிக்கப்பட்டவற்றின் சம்பாதகத் தன்மையால் விநியோக மாம். ஆகலின், ஒரு வாக்கியமும், அத்துவிதப் பிரஹ்மத்தினைப் பிரதிபாதிப்பதோடு விரோதிப்பதே யின்றும்.

இவ் வாறு, ஸ்வரூப தடஸ்த லக்ஷணங்களால், லக்ஷிக்கப்படும், தத் பத வாச்சிய மாய ஈசுவர சைதந்யம், மாயையிற் பிரதிபிம்பிக்கப்பட்டதா மெனச் சிலர் கூறுகின்றனர். அவர்களின் அபிப்பிராயம் இது வாம்:—ஜீவ பரமேசுவர



சாதாரண சைதந்ய மாத்திரம் பிம்ப மாம். அந்தப் பிம்பமே அவித்தையா ரூப மாயையிற் பிரதிபிம்பித்தல், ஈசுவர சைதந்ய மாம். அந்தக் கரணங்களிற் பிரதிபிம்பித்தல், ஜீவ சைதந்ய மாம், "இந்த ஜீவன் காரியோபாதியாவன். காரணோபாதி ஈசுவரனும்" என்னுஞ் சுருதியால். இம் மதத்தில், ஜலாசயத்தி லுள்ள சூரியப் பிரதிபிம்பத்திற்கும், சராவத்தி லுள்ள சூரியப் பிரதிபிம்பத்திற்கும் போன்று, ஜீவ பரமேசுவரர்களின் பேத மாம். அவித்தையா ரூப உபாதியின் வியாபகத்தால், அதனை யுபாதியாக வுடைய ஈசுவரனுக்கும் வியாபகத் தன்மை யாம். அந்தக் கரணம் பரிச்சிந்ந மாகலின், அதனை யுபாதியாக வுடைய ஜீவனுக்கும் பரிச்சிந்நத் தன்மை யாம். இம் மதத்தில், அவித்தையினா லியற்றப்பட்ட தோஷங்கள் ஜீவனிடத்துப் போன்று, பரமேசுவரனிடத்திலு மிருக்கின்றன. உபாதிகள் பிரதிபிம்ப பக்ஷபாதிக ளாகலின் (என உணர்க).

இதன்கண் ருசி யின்மையால், பிம்ப ரூபம் ஈசுவர சைதந்ய மென ஏனையோர் கூறுகின்றனர். அவர்களின் அபிப்பிராய மிது வாம்:— ஒரு சைதந்யமே பிம்பத் தன்மையினாற் கவரப்பட்டு, ஈசுவர சைதந்ய மாம். பிரதிபிம்பத் தன்மையினாற் கவரப்பட்டு, ஜீவ சைதந்ய மாம். பிம்பப் பிரதிபிம்ப கற்பனையின் உபாதியும், ஏக ஜீவ வாதத்தி லவித்தை யாம். அநேக ஜீவ வாதத்தில், அந்தக் கரணங்களே யாம். அவித்தை, அந்தக் கரணங்களின் நிமித்தத்தால், ஜீவ பர பேத மாம். உபாதியினா லியற்றப்பட்ட தோஷங்களும், பிரதிபிம்ப னாகிய ஜீவன்கண்ணேயே யிருக்கின்றன. பிம்ப னாகிய பரமேசுவரனிடத்தி லில வாம். உபாதிக்குப்

பிரதிபிம்ப பக்ஷபாதித் தன்மை யிருத்தலின். இம் மதத்திலும், ஆகாய சூரியனுக்கும், ஜலாதிகளில் விளங்கும் பிரதிபிம்ப சூரியனுக்கும் போன்று, ஜீவ பரர்களின் பேத மாம்.

அற்றேல், கிரீவாஸ்த முகத்திற்குக் கண்ணாடியில் (இன்மை) போன்று, பிம்ப சைதந்ய மாகிய பரமேசுவரன் ஜீவனிடத்தி லின்மையால், அவனுக்குச் சர்வாந்தரியாமித் தன்மை யுளவாகா தெனின், அற் றன்று, மேக நக்ஷத்திரத்தோடு கூடிய ஆகாயத்திற்கு, ஜலாதிகளிற் பிரதிபிம்பத் தன்மை யிருக்குமிடத்துப் பிம்ப ரூப மாகிய மஹாகாயத்திற்கும், ஜல முதலிய பிரவேச சம்பந்தம் பார்க்கப்படுதலான். பரிச்சிந்ந மாய பிம்பத்திற்குப் பிரதிபிம்ப தேசத்திற் சம்பந்த மின்றி யிருப்பினும், அபரிச்சிந்ந மாய பிரஹ்ம பிம்பத்திற்குப் பிரதிபிம்ப தேச சம்பந்தத்தில் விரோத மின்மையின். ரூப மற்ற பிரஹ்மத்தின் பிரதிபிம்பம் பொருந்தாது, ரூப முடையதற்கே அத் தன்மை பார்க்கப்படுதலானென்று கூறற்க; ரூப மின்றிய ரூபத்திற்கும், பிரதிபிம்பம் பார்க்கப்படுதலின். ரூப மின்றிய திரவியத்தின் பிரதிபிம்ப அபாவம் நியம மன்றாம். ஆத்மாவிற்குத் திரவியத் தன்மையி னபாவம் அறையப்பட்டிருத்தலின். "ஜல சந்திரன் போன்று ஒன்றாகவும், அநேகமாகவுங் காணப்படுகின்றான்", "எங்ஙனம் சூரியன் ஜலத்தினின்றும் பிந்ந மாயினும், அநேகமாக ஒருவன் செல்லுகின்றானோ (அங்ஙனமே) இச் சோதி ரூப ஆத்மாவு மாம்" என்பன வாதி வாக்கியத்தினால், பிரஹ்மப் பிரதிபிம்பத்தின் அபாவ அநுமானம் பாதிக்கப்பட்டிருத்தலினாலும் (என்க). இவ் வாறு, தத் பதார்த்தம் நிரூபிக்கப்பட்ட தாம்.



இப் பொழுது, துவம் பதார்த்தம் நிரூபிக்கப்படுகின்றது. ஏக ஜீவ வாதத்தில், அவித்தையாப் பிரதிபிம்பன் ஜீவ னாம். அநேக ஜீவ வாதத்திலோ, அந்தக் கரணப் பிரதிபிம்ப னாம். அவனும், ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தி ரூப அவத்தை மூன் றுடைய னவன்.

அவற்றுள், ஜாக்கிரத் தசை யென்பது, இந்திரிய ஜந்நிய ஞாந அவஸ்தை யாம். வேறு அவஸ்தைகளி லிந்திரிய மின் றாகலி னதிவியாப்தி யின்றாம். இந்திரிய ஜந்நிய ஞாநமும், அந்தக் கரண விருத்தி யாம். ஸ்வரூப ஞாநத்திற்கு அநாதித் தன்மை யுள தாகலின்.

அந்த அந்தக் கரண விருத்தியும், ஆவரண நிவிர்த்தியின் பொருட் டெனச் சிலர் மத மாம். அங்ஙன மன்றோ, அவித்தையா உபகித சைதந்யத்திற்கு ஜீவத்வ பக்ஷத்தில், கடாதி யதிஷ்டாந சைதந்யம் ஜீவ ரூப மாகலின், ஜீவனுக்கு எப் பொழுதுங் கடாதிகளின் விளக்கம் வரும் (ஆகலின்,) கடாதி யவச்சிந்ந சைதந்யத்தினை மறைக்கு மஞ்ஞாநம் மூலாவித்தையின் பரதந்திரமாய் அவஸ்தை யென்னும் பத வாச்சியமாக அங்கீகரிக்க வேண்டும். இங்ஙன மாங்கால், எப் பொழுதுங் கடாதிகளின் விளக்கப் பிரசங்க மின்றாம். ஆவரண மின்றிய சைதந்யத்திற்கே விளக்கப் பிரயோஜகத் தன்மை யுள தாகலின். அந்த ஆவரண மும், எப் பொழுது மிருக்குமாயில், ஒரு காலத்திலும் கடாதிகளின் பாநம் பொருந்தா தாம். ஆகலின், அதன் நாசங் கூற வேண்டுமிடத்து, அதன் நாசத்தினை யுண்டாக்குவது சைதந்ய மாத்திர மன்றாம். அதனை விளக்குவதற்கு அத னிவர்த்த

கத் தன்மை பொருந்தாமையின். விருத்தியோடு கூடிய சைதந்யமு மன்றும், பரோக்ஷ ஸ்தலத்திலும், அத னிவிர்த்தி வருதலின். ஆகலின், பரோக்ஷ வியாவர்த்த மாய விருத்தி விசேஷத்திற்கு, அல்லது, அத னுபகித சைதந்யத்திற்கு, ஆவரண நாச ஜநகத் தன்மையா மாகலின், ஆவரண நிவிர்த்தி யின் பொருட்டு விருத்தி யென்று கூறுகின்றனர்.

சம்பந்தத்தின் பொருட்டு விருத்தி யென்பது ஏனை யோர் மத மாம். ஆண்டும், அவித்தையினை உபாதியாக வுடைய அபரிச்சிந்நன் ஜீவ னவன், அவனும் கடாதிப் பிரதேசத்தி லிருப்பினும், கடாதி யாகார அபரோக்ஷ விருத்தி யின்றிய காலத்துக் கடாதிகளை விளக்குவ தின்றும், கடாதிகளோடு சம்பந்த மின்மையான். அவ் வவ் வாகார விருத்தி காலத்திலோ, விளக்குகின்றனன்; அப் பொழுது சம்பந்த முண்மையின்.

அற்றேல், அவித்தையினை யுபாதியாக வுடைய அபரிச் சிந்நனாய் ஸ்வயமே எல்லா வஸ்துக்களோடுஞ் சம்பந்த முடைய ஜீவனுக்கு, விருத்தி யின்றிய காலத்துச் சம்பந்தா பாவங் கூறுத லசங்கத மாம. அசங்கத்துவ திருஷ்டியாற் சம்பந்தாபாவங் கூறுமிடத்தும், விருத்தியின் பின்னரும சம்பந்த முண்டாகா தாலோ வெனின், கூறப்படுகின்றது; விருத்தி யின்றிய தசையில், ஜீவனுக்குக் கடாதிகளோ டுள்ள சம்பந்த சாமாநியத்தினை நிஷேதிக்க வில்லை. பின் என் னெனின், கட விளக்கப் பிரயோஜக மாகிய சம்பந்த விசேஷத் தினை யாம்.



அந்தச் சம்பந்த விசேஷமும், விஷயத்திற்கும், ஜீவ சைதந்யத்திற்கும், வியங்கிய வியஞ்சக பாவ லக்ஷண மாம். ஒரு காலத் துண்டாவன வாம். ததாகார விருத்தியினா லுண்டாவ தாம். அங்ஙன மன்றே, தைஜஸ மாய அந்தக் கரணம் ஸ்வச்சத் திரவிய மாகலின், ஸ்வபாமாகவே ஜீவ சைதந்யத்தினை விளக்குவதி லாற்ற லுடைய தாம். கடாதி களோ, அங்ஙன மன்றும்; ஸ்வச்ச மற்ற திரவிய மாகலின். தனதாகார விருத்தி சம்யோக காலத்தின்கண்ணே, விருத்தியினால் நிவிர்த்தியான ஜாட்டிய தர்ம முடைமை யாலும், விருத்தியினால் உண்டாக்கப்படும் சைதந்யத்தா லபிவியஞ்சகஞ் செய்யும் தகுதியினை யாசிரயித்தலாலும், விருத்தி யுண்டானதன் பின் சைதந்யத்தை விளக்குகின் றது. அது விவரணத்தில், "அந்தக் கரணம் தன்னிடத்துப் போன்று, தன்னோடு சம்சர்க்க முடைய கடாதிகளிடத்தும், சைதந்யத்தினை விளக்கும் யோக்கியத் தன்மையினை யுண் டாக்குகின்றது" என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஸ்வச்ச மின்றிய திரவியத்திற்கும், ஸ்வச்சத் திரவியத் தின் சம்பந்த காலத்தில் பிரதிபிம்பத்தினைக் கிரகிக்குந் தன்மை பார்க்கப்படுகின்றது மாம். எங்ஙனம்? சுவர் முத லியவற்றிற்கு ஜல முதலியவற்றின் சம்யோக காலத்தில், முக முதலிய பிரதிபிம்பத்தினைக் கிரகிக்குந் தன்மை யாம். கடாதிகளின் அபிவியஞ்சகத் தன்மையும், அதன் பிரதி பிம்பத்தினைக் கிரகிக்குந் தன்மை யாம். சைதந்ய அபி வியக்தத் தன்மையும், ஆண்டுப் பிரதிபிம்பிக்குந் தன்மை யாம். இவ் வாறாய, அபிவியஞ்சகத் தன்மை சித்தித்தற் பொருட்டே, அபரோக்ஷ ஸ்தலத்தில், விருத்தி வெளிச்

செல்லல் அங்கீகார மாம். பரோக்ஷ ஸ்தலத்திலோ, வஹ்நி முதலியவற்றிற்கு விருத்தியோடு சம்யோக மின்மையின், சைதந்யத்தினை அபிவியஞ்சகஞ் செய்யாமையால் அப ரோக்ஷத் தன்மை யின்றாம். அம் மதத்தில் விஷயங் களின் அபரோக்ஷத் தன்மை, சைதந்ய அபிவியஞ்சகத் தன்மையா மென் றுணர்க. இவ்வாறு, ஜீவனுக்கு அபரிச் சிந்நத் தன்மையிலும், விருத்தியின் சம்பந்தார்த்தத் தன் மை நிரூபிக்கப்பட்ட தாம்.

இப் பொழுது, பரிச்சிந்நத் தன்மைப் பக்ஷத்தில், சம் பந்தார்த்தத் தன்மை நிரூபிக்கப்படுகின்றது. அங்ஙன மன்றோ, அந்தக் கரண உபாதி யுடையவன் ஜீவ னும், அவனுக்கும் கடாதி உபாதாநத் தன்மை யின்றாம். கடாதி தேச சம்பந்த மின்மையான். பின்னரோ, பிரஹ்மமே கடாதிகளி னுபாதாந மாம். அந்த மாயா வுபகித சைதந் யத்திற்குச் சகல கடாதி அந்வயித் தன்மை யிருத்தலின். இதனானே, பிரஹ்மத்திற்குச் சர்வஞ்ஞத் தன்மை யாம். ஆகவே, ஜீவனுக்குக் கடாதி அதிஷ்டாந மாய பிரஹ்ம சைதந்யத்தி னபேத மின்றிக் கட முதலியவற்றினை விளக் குந் தன்மை பொருந்தாமை யாங்கால், அதனை விளக்கு தற்குக் கட முதலியவற்றி னதிஷ்டாநப் பிரஹ்ம சைதந் யத்தோடு அபேத சித்தியின் பொருட்டுக் கடாதி யாகார விருத்தி யங்கீகரிக்கப்படுகின்றது.

அற்றேல், விருத்தியானும் பிரமாத்ரு, விஷய சைதந் யங்களி னபேதம் எங்ஙனஞ்? சம்பாதிக்கப்படுகின்றது, கட, அந்தக் கரண ரூப உபாதியின் பேதத்தினால், அத னவச்



சிந்ந சைதந்யங்கட்கு அபேதம் பொருந்தாதா மாலோ வெனின், அற் றன்று; விருத்திக்கு வெளித் தேசத்திற் செல்லல் அங்கிகரித்தலால்; விருத்தி, அந்தக் கரண, விஷ யங்கள் ஓரிடத் துள வாதலின், உபதேயங்களின் பேதா பாவம் புகலப்பட்டிருத்தலின். இவ் வாறு, அபரோக்ஷ ஸ்தலத்தில் மத பேதத்தினால் விருத்தியின் விநியோகம் விளம்பப்பட்ட தாம்.

இந்திரிய அஜந்நிய மாய் விஷயத்தினைக் கோசரிக்கும் அபரோக்ஷ அந்தக் கரண விருத்தி யவஸ்தை, ஸ்வப்நா வஸ்தை யாம். ஜாக்கிராவஸ்தையின் வியாவிர்த்தியின் பொருட்டு "இந்திரிய அஜந்நியம்" எனவும்; அவித்தையா விருத்தி யுடைய சுழுத்தியின்கண் உண்டாம் அதி வியாப்தியினை நிவிர்த்தித்தற்கு, "அந்தக் கரணம்" என் றுங் கூறப்பட்ட தாம்.

அவித்தையினைக் கோசரிக்கும் அவித்தையா விருத்தி அவஸ்தை, சுழுத்தி யாம். ஜாக்கிர, ஸ்வப்நங்களின் அவித் யாகார விருத்தி, அந்தக் கரண விருத்தி யாகலின்; ஆண்டு அதிவியாப்தி யின்றாம்.

ஈண்டுச் சிலர் மரண மூர்ச்சைகட்கு வேறு அவஸ்தாத் தன்மை கூறுகின்றனர். ஏனையோர் சுழுத்தியின்கண்ணே அவற்றிற்கு அடக்கங் கூறுகின்றனர். ஆண்டு, அவற் றிற்கு அவஸ்தாத் திரயங்களின் அடக்கம், அடக்க மின்மைகள் த்வம் பதார்த்த நிரூபணத்தில் உபயோக மின்மையால் ஆண்டு யத்தநஞ் செய்ய வில்லை.

அவனுக்கு மாயையின் உபாதி யபேக்ஷையால் ஏகத் தன்மை யெனவும், அந்தக் கரண உபாதியி னபேக்ஷையால் நாநாத் தன்மை யெனவுங் கூறுகின்றனர். இதனால் சீவனுக்கு அணுத் தன்மை நிராகரிக்கப்பட்ட தாம். "புத்தியின் குணத்தினாலும், ஆராக்கிர (தாற்றுக் கோல் முனை) மாத்திரம் என வறிக. ஆத்ம குணத்தினாலும், அவரமும் மென வறிக" என்ப தாதிகளில் புத்தி சப்த வாச்சிய மாய அந்தக் கரண பரிமாண உபாதியினை யுடைய ஜீவனுக்குப் பரமாணுத் தன்மை கேட்கப்படுதலின். அந்த ஜீவனும் ஸ்வயம் பிரகாச னவன். ஸ்வப்நாவஸ்தையினை யாரம்பித்து, "ஈண்டு இப் புருஷன் ஸ்வயம் ஜோதியா யிருக்கின்றான்" என்னுஞ் சுருதியால். அநுபவ ரூப னாயு மிருக்கின்றான் "பிரஞ்ஞாநகநனே" என்ப தாதி சுருதியால். "அநுபவிக்கின்றேன்" என்னும் வியவகாரமோ, விருத்தியின்கண் பிரதிபிம்பித் திருக்குஞ் சைதந்யத்தினைக் கொண்டு பொருந்துகின்றது. இவ் வாறு, த்வம் பதார்த்தம் நிரூபிக்கப்பட்டது.

இப் பொழுது, மஹாவாக்கியத்தினாற் பிரதிபாதிக்கப்படும் தத், த்வம் பதார்த்தங்களின் ஐக்கியம் அறையப்படுகின்றது.

அற்றேல், "நான் ஈசுவர னல்லன்" என்ப தாதிப் பிரத்தியக்ஷத்தினாலும், "கிஞ்சிஞ்ஞத்வ சர்வஞ்ஞத்வ விருத்த தர்ம ஆசிரயத் தன்மை முதலிய லிங்கத்தினாலும், "இரண்டு பக்ஷிகள்" என்ப தாதி சுருதியினாலும், "லோகத்தில் க்ஷரம் அக்ஷர மென இரண்டு புருஷர்க



ளுளர். சர்வ பூதங்களும் க்ஷர மாம். கூடஸ்தன் அக்ஷர மாம் எனக் கூறப்படுகின்றது" * (பகவற் கீதை 15--16) என்பன வாதி ஸ்மிருதியாலும். ஜீவ பர பேத மறியப்படுதலினால், தத் துவ மசி யாதி வாக்கியம், "யூபம் ஆதித்தியன்", "தர்ப்பை எஜமாநன்" என்ப தாதி வாக்கியம் போன்று, உபசாரார்த்தமேயா மாலோ வெனின், அற் றன்று; சம்பவிக்கப்பட்ட கரண தோஷத்தினை யுடைய பேதப் பிரத்தியக்ஷத்திற்குத், தோஷ சம்பவ மின்றிய வேதத்தினா லுண்டாய ஞாநத்தினாற் பாதிக்கப்படுந் தன்மை யுள வாகலின். இங்ஙனங் கொள்ளாக்கால், சந்திரனிடத் துள்ள அதிகப் பரிமாணத்தினைக் கவரும் ஜோதிஷ சாஸ்திரத்திற்குச், சந்திரனது பிராதேச (அற்ப பரிமாண) த்தினைக் கவரும் பிரத்தியக்ஷத்தினால் பாதம் வருதலினானும், பாகத்தினால் ரத்த மாய கடத்தில், "இது சிவப் பாம். கறுப் பன்று." என்பது போன்று, "சவிசேஷணத்தில்" என்னும் நியாயத்தினால், ஜீவ பர பேதத்தினைக் கவரும் பிரத்தியக்ஷத்திற்கு, விசேஷண ரூப தர்ம பேத விஷயத் தன்மை யுளதாகலானும். (என்க.)

இதனானேயே, அநுமாநமும் பிரமாண மன்றாம். மேரு பாஷாண மயத் தன்மை யநுமாநம் போன்று, ஆகம

---

* பகவற் கீதை. மருவு கின்றவிவ் வுலகின் மாய்தலே, யுருவ மாகமுன் புடைய தொன்றுமே, யருவ மொன்றினா லழிவ தின்மையே, பொருவ நின்றதோர் பொருளு முண்டரோ. 15—20.

மொழிசெய் கின்றவிவ் விரண்டு முற்றவே, விழியி னாலுற நோக்கின் மெய்ம்மையே, அழிவ தாக்கையாங் கழிவு பாடிலா, தொழிவ தென்னெனி னுயிரொன் கின்றதே. 15—21.

விரோத மாகலின். வேறு ஆகமத்தின் விரோதமு மன்றும், தத்பர அதத்பர வாக்கியங்களில், தத்பர வாக்கியத்திற்குப் பல முடைமை யுள வாகலின், லோகத்திற் சித்தித்த பேதத்தினை யநுவதிக்கும், "இரண்டு பக்ஷிகள்" என்ப தாதி வாக்கியத்தி னபேக்ஷையினுல், உபக்கிரம உபசம்மாராதியினு லறியப்பட்ட அத்வைத தாத்பர்ய விசிஷ்டமாய தத்துவமசி யாதி வாக்கியத்திற்குப் பிரபலத் தன்மை யுள தாகலின். ஜீவ பர ஐக்கியத்தில், விருத்த தர்ம ஆசிரயத் தன்மை ஒவ்வாமை யின்று, சீத மாகிய ஜலத்திற்கே, ஔபாதிக மாய உஷ்ணத்தின் ஆசிரயத் தன்மை போன்று, ஸ்வபாவமாக நிர்க்குண மாய வதற்கே, அந்தக் கரணுதி யுபாதியினை யுடைய கர்த்திருத்வாதி ஆசிரயத் தன்மையின் விளக்கம் பொருந்துதலின்.

ஜல முதலியவற்றில் உஷ்ணத் தன்மை யாரோபிதமாயின், அப் பொழுது பிரகிருதத்திலும் சமாந மாம். சித்தாந்தத்தில் கர்த்திருத்வம் ஓரிடத்து மின்மையின், ஆரோப்பியத்தினை விஷயஞ் செய்யும் பிரமையினு லுண்டாய சமஸ்கார மில்லா விடத்து, எங்ஙன மாரோபமாமென்று கூறற்க; லாகவத்தால், ஆரோப்பியத்தினை விஷயமாக வுடைய சமஸ்காரத் தன்மையானேயே, அதற் கேதுத் தன்மை யுள வாகலின். முத லாரோபத்தில், கதி யென்னை என்னற்க; கர்த்திருத்வாதி அத்தியாசப் பிரவாகம் அநாதி யாகலின்.

தத்துவம் பத வாச்சிய மாய விசிஷ்டங்கட்கு ஐக்கிய யோக்கியத் தன்மை யின்றி யிருப்பினும், லக்ஷிய ஸ்வரூபங்கட்கு ஐக்கியம் அறையப்பட்டதே யாம். இதனுனே



அதனைப் பிரதிபாதிக்கும் தத் துவ மசி யாதி வாக்கியங்கட்கு, "சோயம் (தேவதத்தன்)" என்ப தாதி வாக்கியம் போன்று, அகண்டார்த்தத் தன்மை யாம்.

காரிய பர (வாக்கிய) ங்கட்கே பிராமாண்ய மென்பதின்று, "ஹே சைத்திரனே! உனக்கு மகன் பிறந்தான்" என்ப தாதிகளில், சித்த (வாக்கிய) த்திலும் சங்கதி கிரகிக்கப்படுதலின் (என்க).

இவ் வாறு, சர்வப் பிரமாண அவிருத்தமாய், சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களால் பிரதிபாதிக்கப்படும் ஜீவ பர ஐக்கியம், வேதாந்த சாஸ்திரத்தின் விஷயமாமென்பது சித்த மாயிற்று.

7. விஷய பரிச்சேத முற்றுப் பெற்றது.

## 8. பிரயோஜந பரிச்சேதம்.

இப் பொழுது, பிரயோஜநம் நிரூபிக்கப்படுகின்றது.

எது அறியப்பட்டதாய்த் தன்னிடத் துளதாதலால் விரும்பப்படுகின்றதோ, அது பிரயோஜந மாம். அதுவும், முக்கியமும், கௌணமு மென விரு வகைத் தாம். அவற்றுள், சுக, துக்காபாவங்கள் முக்கியப் பிரயோஜநங்க ளாம். அதன் அந்நியதர சாதநம் கௌணப் பிரயோஜந மாம். சுகமும், சாதிசயமும், நிரதிசயமு மென இரு வகைத் தாம். அவற்றுள், சாதிசய சுகம் விஷய சம்பந்தத்தினு லுண்டான அந்தக் கரண விருத்தியின் தார தம்மியத்தினுற்

செய்யப்பட்ட ஆநந்த லேசத்தின் ஆவிர்ப்பாவ விசேஷ மாம். "அந்நிய பூதங்கள், இந்த ஆநந்தத்தினது மாத்திரையினையே உபஜீவிக்கின்றன" என்னுஞ் சுருதியால் (என்க).

நிரதிசய சுகமும், பிரஹ்மமே யாம். "ஆநந்தம் பிரஹ்மமென உணர்ந்தனர்", "விஞ்ஞாந மாநந்தம் பிரஹ்மம்" என்பன வாதி சுருதிகளால் (என்க). ஆநந்த ரூபப் பிரஹ்மப் பிராப்தியும், துக்கநிவிர்த்தியும், மோக்ஷ மாம். "பிரஹ்மமுணர்ந்தான், பிரஹ்மமே யாகின்றான்." "ஆத்மாவினையுணர்ந்தான் சோகத்தினைக் கடக்கின்றான்." என்பன வாதி சுருதிகளால். லோகாந்தரப் பிராப்தியோ, அல்லது, அதனுலுண்டாய விஷய சம்பந்த ஆநந்தமோ, மோக்ஷ மன்றாம்; அது ஜந்நிய மாகலின், அநித்தியத் தன்மையில், முக்தனுக்கு மீண்டு திரும்புகை வருதலின் (என்க).

அற்றேல், உன் மதத்திலும் ஆநந்தப் பிராப்திக்கும், அநர்த்த நிவிர்த்திக்கும், சாதித் தன்மையிற், தோஷம் சமாநமாம். அநாதித் தன்மையில், மோக்ஷத்தினை யுத்தேசித்துச் சிரவணாதிகளி னிடத்துப் பிரவிர்த்தி பொருந்தாதாங் கொல்லோ வெனின், அற் றன்று; சித்தித் திருக்கும் பிரஹ்ம ரூப மோக்ஷத்திற்கே, அசித்தித் தன்மைப் பிராந்தியினால், அதன் சாதநத்தினிடை முயறல் பொருந்துதலின். அநர்த்த நிவிர்த்தியும், அதிஷ்டாந ரூபப் பிரஹ்ம ஸ்வரூபத்தாற் சித்தித்தே யிருக்கின்ற தாம். லோகத்திலும், அடைந்தவற்றி னடைவிற்கும், நிவிர்த்தியானவற்றி னிவிர்த்திக்கும், பிரயோஜநத் தன்மை பார்க்கப்பட்டே யிருக்கின்ற தாம். எங்ஙனம்? கையின்கண் ணுள்ள, மறந்த ஸ்வர்ணாதி



களில், "உனது கரத்தில் ஸ்வர்ணம்" என்னு மாப்தோபதேசத்தினால், அடையப்படாதது போன்று, அடையப்படுகின்ற தாம். அல்லது, எங்ஙனம்? சுற்றிக்கொண்ட கர்விலுள்ள கயிற்றில், சர்ப்பத் தன்மைப் பிராந்தியினை யுடைய புருஷனுக்கு, "இது அர வன்று" என்னு மாப்த வாக்கியத்தினால், நிவிர்த்தி யடைந்த சர்ப்பத்திற்கே, நிவிர்த்தி பிரசித்த மாம். இவ் வாறு, அடைந்த ஆநந்தத்தினது அடைவும், நிவிர்த்தியான அநர்த்தத்தி னிவிர்த்தியும் ஆகிய மோக்ஷம் பிரயோஜந மாம்.

அதுவும், ஞாந மொன்றானே சாதிக்கத் தக்க தாம். "அதனை யறிந்து மிருத்யுவினை யகல்கின்றான். மோக்ஷத்திற்கு வேறு வழி யின்றாம்". என்னுஞ் சுருதியாலும், அஞ்ஞாந நிவிர்த்திக்கு ஞாந மொன்றானே சாதிக்கப்படுந் தன்மை நியம மாகலானும் (என்க).

அந்த ஞாநமும், பிரஹ்மாத்ம ஐக்கியத்தினைக் கோசரிப்ப தாம். "ஹே ஜநகனே! அபயத்தினை யடைந்தாய், ஆகலின், நான் பிரஹ்மமா யிருக்கின்றேன் என ஆத்மாவினையே யறிக" என்னுஞ் சுருதியாலும், "தத்துவமசி யாதி வாக்கியத்தி னின்று முண்டாய ஞாநம் மோக்ஷத்தின் சாதநமாம்" என்னும் நாரத ருடைய வசநத்தினாலும் (என்க).

அந்த ஞாநமும், அபரோக்ஷ ரூப மாம். பரோக்ஷத் தன்மையில், அபரோக்ஷப் பிராந்தியினை நிவிர்த்திக்குந் தன்மை யடா தாகலின். அந்த அபரோக்ஷ ஞாநமும், தத்துவமசி யாதி வாக்கியத்தா லெனச் சிலர் கூறுகின்றனர். மநநநிதித்தியாசநத்தினாற், பரிசுத்தமான அந்தக் கரணத்தானே யாம் எனப் பின்னுஞ் சிலர் பன்னுகின்றனர்.

ஆண்டுப் பூர்வாசாரியர்களி னபிப்பிராயம் இது வாம்:— ஞானத்தி னபரோக்ஷத் தன்மை, கரண விசேஷ உற்பத்தியி னிபந்தன மன்றாம், பின்னரோ, பிரமேய விசேஷ நிபந்தன மாம் என (முதற் பரிச்சேதத்தில்) முழக்கப்பட்டிருக் கின்றது. ஆகவே, பிரஹ்மத்திற்குப் பிரமாதா வாய ஜீவ னோடு அபின்ன மாகலின், அதனைக் கோசரிக்கும் சப்த ஜன்ய ஞானமும் அபரோக்ஷ மாம். இதனானே, பிரதர்த்தன அதி கரணத்தில், பிரதர்த்தனனைக் குறித்து, "பிராண னுயிருக் கின்றேன். பிரஞ்ஞாத்துமா. அந்த என்னை ஆயுள் அமிர்த மென உபாசிக்க". என இந்திரன் கூறிய வாக்கியத்தில், பிராண சப்தத்திற்குப் பிரஹ்ம பரத் தன்மை நிச்சயிக்குங் கால், "என்னை யுபாசிக்க" என்னும் அஸ்மத் (நான்) என் னும் சப்தத்தின் பொருத்த மின்மையினை ஆசங்கித்து, அதன் உத்தரத் தன்மையினாற் பிரவிர்த்திக்கு மிடத்து, "சாஸ்திர திருஷ்டியானோ, உபதேசம் வாம தேவர் போன்று" என்புழிச் சூத்திரத்தில், சாஸ்திர சம்பந்தமான திருஷ்டி யாகலின். தத்துவாசி யாதி வாக்கியத்தா னுண் டாய, "நான் பிரஹ்மம்" என்னும் ஞானம், சாஸ்திர திருஷ்டி சப்தத்தினாற் கூறப்படுகின்றது (என்பதும் பொருந்து கின்றது).

ஏனையோர்களின் கருத் திது வாம்:— கரண விசேஷ நிபந்தனமே, ஞானங்களின் பிரத்தியக்ஷத் தன்மை யாம், விஷய விசேஷ நிபந்தன மன்றாம். ஒரு சூக்கும வஸ்துவின் கண்ணே, படுகரண, அபடுகரண முடைய புருஷர்களுக்குப் பிரத்தியக்ஷத் தன்மை, அப்பிரத்தியக்ஷத் தன்மை வியவ காரம் பார்க்கப்படுதலின். ஆகவே, ஞானத்தின் சாக்ஷாத்



தன்மையில், இந்திரிய ஜன்யத் தன்மைக்கே பிரயோஜக முள வாதலின், ஓசையா னுண்டாய ஞானத்திற்கு, அப ரோக்ஷத் தன்மை யின்றாம். பிரஹ்ம சாக்ஷாத்காரத்திலும், மனன நிதித்தியாசனத்தினால் சுத்தம் பண்ணப்பட்ட மனமே கரண மாம். "மனதானே அறிக" என்ப தாதி சுருதியால். மனதா லறியப்படா தென்னுஞ் சுருதியும், சுத்த மின்றிய மனதின் விஷய மாம். இவ் வாறாயின், பிரஹ்மத்திற்கு உப நிஷத்தானே யறியப்படுந் தன்மை யடா தென்ப தின்று, நாம் புகன்ற மனதிற்கு வேதத்தா லுண்டாய ஞானத்தின் பின்னரே பிரவிர்த்தி யுண்டாகலான். வேத உபஜீவித் தன்மை யிருத்தலின். வேதத்தினை உபஜீவிக்காத வேறு பிரமாணங்களா லறியப்படுந் தன்மைக்கே, வேதத்தா லறியப் படுந் தன்மை விரோதி யாகலின். சாஸ்திர திருஷ்டி சூத் திரமும், பிரஹ்மத்தினை விஷயமாக வுடைய மானஸப் பிரத்தியக்ஷத்திற்குச் சாஸ்திரப் பிரயோஜ்ஜியத் தன்மை யுள தாகலின் பொருந்துகின்றது. அது, "அபிசம்ராகனே (பக்தித் தியான ஜபாதி யநுஷ்டான காலத்திலும் ஆத்மாவினை யோகிகள் பார்க்கின்றனர்) என்னுஞ் சூத்திரத்தினால், சாஸ் திரார்த்தத் தியானத்தினா லுண்டாய பிரமை யாப வஸதச் சாஸ்திர திருஷ்டி யென வாசஸ்பதி உணர்ந்தனர்" என்று (கற்ப தருவில்) கூறப்பட்டிருக்கின்றது.

அந்த ஞானமும், பாவ க்ஷயத்தா னுண்டாகின்றது, அதுவும், கர்மாநுஷ்டானத்தினால் எனப் பரம்பரையாகக் கர்மங்கட்கு விநியோக மாம். இதனானே, "அவ் விதனைப் பிராஹ்மணர்கள் வேதாத்தியயனத்தினாலும், எஞ்ஞத்தினா லும், தானத்தினாலும், உபவாச மாய தவசினாலும், அறிய

இச்சிக்கின்றனர்'' என்ப தாதி சுருதியும், ''கர்மங்களால் கஷாயம் பக்குவ மாயில், அதன் பின் ஞாநம் பிரவிர்த்திக்கின்றது'' என்ப தாதி ஸ்மிருதியும் பொருந்துகின்றது. இவ் வாறு, சிரவண, மநந, நிதித்தியாசநங்களும் ஞாந சாதநங்க ளாம். மைத்திரேயிப் பிராமணத்தில், ''ஹே! மைத்திரேயி! ஆத்மா பார்க்கத்தக்கது''. எனத் தரிசநத்தினை யநுவாதஞ் செய்து, அதன் சாதநத் தன்மையால், ''சேட்க, மநநிக்க, நிதித்தியாசிக்க''. எனச் சிரவண, மநந, நிதித்தியாசநங்கள் விதிக்கப்படுதலின்.

வேதாந்தங்கட்கு, அத்வைதப் பிரஹ்மத்தில், தாத்பர்யத்தினை நிச்சயிப்பதற்கு அநுகூலமான மாநசக் கிரியை, சிரவண மாம். சப்தத்தினா னிச்சயிக்கப்பட்ட அர்த்தத்தில், வேறு பிரமாண விரோத சங்கை உண்டாகுமிடத்து, அதனை நிவிர்த்தித்தற்கு அநுகூல மாய தர்க்க ரூப ஞாநத்தினை யுண்டாக்கும் மாநச வியாபாரம், மநந மாம். அநாதி துர்வாசனையால் விஷயங்களில் இழுக்குஞ் சித்தத்தினை, விஷயங்களினின்றும் பிரித்து, ஆத்மாவினிடத்தில் ஸ்திரமாயிருத்தற்கு அநுகூல மாய மாநச வியாபாரம், நிதித்தியாசந மாம்.

அவற்றுள், நிதித்தியாசநம் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின்கண் நேரே காரண மாம். ''தன்னுடைய குணங்களால் மறைபட்டிருக்குந் தேவாத்ம சக்தியைத் தியாந யோகத்தினை யுடைய யோகிகள் பார்த்தார்கள்'' என்ப தாதி சுருதியால். நிதித்தியாசநத்திலும், மநநம் ஏது வாம். மநநஞ் செய்யாதவனுக்கு அர்த்தத்தின் திடத் தன்மை யின்மை



யால், அதன் விஷய மாய நிதித்தியாசநம், பொருந்தாமையின். மநநத்திலும், சிரவண மேது வாம், சிரவண மில்லாவிடத்துத் தாத்பர்ய நிச்சய மின்மையால், சாப்த ஞாநமின்மையின், சுருதார்த்த விஷயத்தில், யுக்தத் தன்மை, அயுக்தத் தன்மைகளின் நிச்சய அநுகூல மாய மநநம் பொருந்தாமையின்.

அம் மூன்றும் ஞாந முண்டாவதன்கண் காரணங்களெனச் சில ஆசாரியர் கூறுகின்றனர். அன்னியரோ, சிரவணம் பிரதாந மாம், மநந நிதித்தியாசநங்களோ, சிரவணத்தின் பின் னுண்டாவ தாயினும், சிரவணத்தின் பல மாகிய பிரஹ்ம ஞாநத்தினை யுண்டாக்குவதால் ஆரா (தூரத்) துபகாரகத் தன்மையால், அங்கத் தன்மை யென்று கூறுகின்றனர். அந்த அங்கத் தன்மையும், (பூர்வ மீமாம்சையின்) மூன்றாவ தத்தியாயத்திற் கூறி யுள்ள அங்கத் தன்மை ரூப மன்றாம். சுருதி முதலிய அந்நியதமப் பிரமாணத்தினா லறியப்படும் அதற்குப், பிரகிருதத்தில் சுருதி முதலியன இல்லாவிடத்துப் பொருந்தாமையின்.

அங்ஙன மன்றோ, ''நெற்களால் வேட்க'', ''தயிரால் ஓமிக்க''. என்ப தாதிகளிற் போன்று, மநந, நிதித்தியாசநங்கட்கு அங்கத் தன்மையில், ஒரு மூன்றாம் வேற்றுமைச் சுருதியு மின்றாம். ''தேவதைகளின் வாச ஸ்தாந மாய தெர்ப்பையினை வெட்டுகின்றேன்'' என்ப தாதி மந்திரங்கட்குத் தெர்ப்பையின் வெட்டுவதனைப் பிரகாசிக்குஞ் சாமர்த்தியம போன்று, ஒரு லிங்கமு மின்றாம்.

வே றிடத்திற் படிக்கப்பட்ட பிரவர்க்கியம் என்னும் யாகத்திற்கு, அக்கிநிஷ்டோம (ப்பிரகரண) த்தில், ''பிரவர்க்

கியம் என்னுங் கர்மத்தினைச் செய்'' என்னும் வாக்கியம் போன்று, சிரவணத்தின் அநுவாதத்தினுல், மநந நிதித்தியாசநத்தினை விநியோகஞ் செய்யும் ஒரு வாக்கியமுமின்றாம்.

''தர்ச பூர்ணமாசங்களால் ஸ்வர்க்க காமன் வேட்க'' என்னும் வாக்கியத்தால் அறிந்த, பல சாதநத் தன்மை, தர்ச பூர்ணமாசப் பிரகரணத்தில், பிரயாஜாதிகட்கு (இருப்பது) போன்று, பல சாதநத் தன்மையால், அறியப்பட்ட சிரவணத்திற்குப் பிரகரணத்தில், மநந நிதித்தியாசநங்கள் புகலப்படவு மில்லை யாம்.

அற்றேல், ''பார்க்க'' எனத் தர்சந அநுவாதத்தினுல், சிரவணம் விதிக்கப்படுங்கால், பிரயோஜந, முடையதால், சிரவணப் பிரகரணத்தில், அதன் சந்நிதியில் கூறப்பட்ட, மநந, நிதித்தியாசநங்கட்குப் பிரயாஜ நியாயத்தினுல், பிரகரணத்தானே அங்கத் தன்மை யாங் கொலோ வெனின், அற் றன்று; ''தியாந யோகத்தினை யுடைய யோகிகள் பார்த்தார்கள்'' என்ப தாதி வேறு சுருதியில், தர்சந சாதநத் தன்மையால் அறியப்பட்ட தியாநத்திற்கு, அங்க ஆகாங்க்ஷையில், பிரயாஜ நியாயத்தினுல், சிரவண மநநங்கட்கே அங்கத் தன்மை வருதலின். கிரமமும், சமாக்கியையும், தூரத்திற் றள்ளப்பட்டன.

மற்றும், பிரயாஜாதிகளில், அங்கத் தன்மை விசாரம் பிரயோஜந முடைய தாம். பூர்வ பக்ஷத்தில், விகிருதிகளில் பிரயாஜ அநுஷ்டாந மின்றாம், சித்தாந்தத்திலோ, ஆண்டு மதன் அநுஷ்டாந மாம். பிரகிருதத்தின்கண்ணே,



சிரவணம் ஒன்றன் பிரகிருதி யன்றாம், எதனுல் மநந, நிதித்தியாசநங்கட்கு ஆண்டும் அநுஷ்டாந மாகிய அங்கத் தன்மை விசாரம் பல மாம். ஆகலின், மநந நிதித்தியாசநங்கட்கு மூன்றாவ தத்தியாயத்திற் கூறிய அங்கத் தன்மை யின்றாம். பின்னரோ, எங்ஙனம்? கடாதி காரியத்தின் கண் மட் பிண்ட முதலியவற்றிற்குப் பிரதாந காரணத் தன்மை யாம்; சக்கர முதலியவற்றிற்குச் சககாரி காரணத் தன்மை யா மாகலின், பிரதாந அப்பிரதாந வியவகார மாமோ; அங்ஙனமே, சிரவண, மநந, நிதித்தியாசநங்கட்கு மாம் என வுணர்க. இது, ''சக்தி தாத்பர்ய விசிஷ்ட சப்த நிச்சயம் பிரமேய ஞாநத்தினைக் குறித்து அவ்வியவதாநத்தினுற் காரண மாகின்றது, பிரமாணத்திற்குப் பிரமேய ஞாநத்தினைக் குறித்து அவ்வியவதாந மிருத்தலின். மநந, நிதித்தியாசநங்களோ, சித்தத்திற்குப் பிரத்தியகாத்மப் பிரவணத் தன்மைச் சமஸ்காரத்தினு லுற்பந்ந மாய, அதன் ஏகாக்கிர விருத்தி யாகிய காரிய வாயிலாய்ப் பிரஹ்மாநுபவத்திற்குக் காரணத் தன்மையினை யடைகின்றன. ஆகலின், பலத்தினைக் குறித்து வியவகித மின்றிய காரண மாய தாத்பர்ய விசிஷ்ட சப்த நிச்சய (சிரவண)த்திற்கு, வியவகித மாய மநந நிதித்தியாசநங்கள் அதன் அங்கங்களா மென அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன'' என்று விவரணுசாரியராற் சூசிப்பிக்கப்பட்டிருக்கின்றது.

சிரவணுதிகளினும், முமுக்ஷுக்கட் கதிகார மாம், காமிய கர்மத்தின்கண் பல விருப் புடையோனுக் கதிகார முள தாகலின். முமுக்ஷுத் தன்மையினும், நித்தியாநித்திய விவேகத்திற்கும், இகாமுத்தரார்த்த பல போக

விராகத்திற்கும், சம தம உபரதி திதிக்ஷை சமாதாந சிரத்தைகட்கும் விநியோக மாம். ஆந்த ரிந்திரிய நிக்கிர கஞ், சம மாம். புறக் கரண தண்டம், தம மாம். விக்ஷேபா பாவம், உபரதி யாம். சீத உஷ்ண முதலிய துவந் துவங் களைச் சகித்தல், திதிக்ஷை யாம். சித்தத்தின் ஏகாக்கிரத் தன்மை, சமாதாந மாம். குரு வேதாந்த வாக்கியங்களில் விசுவாசம், சிரத்தை யாம் (என்க).

ஈண்டு, உபரம சப்தத்தினுற் சந்நியாசங் கூறப்படு கின்றது. ஆகவே, சந்நியாசிகட்கே சிரவணத்தில் அதி கார மெனச் சிலர் கூறுகின்றனர். அந்நியரோ, உபரம சப்தத்திற்குச் சந்நியாச வாசகத் தன்மை யின்மையின், விக்ஷேப அபாவ மாத்திரத்திற்குக் கிரகஸ்தர்க ளிடத்தி லும் பொருந்துதலின், ஜநகாதிகட்கும் பிரஹ்ம விசாரங் கேட்கப்படுதலின், சிரவணுதி விதி சர்வாசிரம சாதாரண மா மென்கின்றனர்.

சகுணேபாசனையும், சித்த ஏகாக்கிரத் தன்மை வாயி லாய் நிர்விசேஷப் பிரஹ்ம சாக்ஷாத்காரத்திற் கேது வாம். அது "நிர்விசேஷப் பரப்பிரஹ்மத்தினைச் சாக்ஷாத்கரித் தற்குச் சமர்த் தின்றிய எந்த மந்தர்களோ, அவர்களுக்குச் சகுணப் பிரஹ்ம நிருபணங்களால் அநுக்கிரகிக்கப்பட்டிருக் கின்றன. எவர்கட்குச் சகுணப் பிரஹ்மோபாசனையினுல் மநம் வசீகரண மாகுமிடத்து (அவர்கட்கு), உபாதி யின்றி, அதுவே நேரே ஆவிர்ப்பவிக்கின்றது" (1-1-20 கல்பதரு) என்று கூறப்பட்டிருக்கின்றது.



அர்ச்சிராதி மார்க்கத்தினுல், பிரஹ்ம லோகத்தினை யடைந்து, ஆண்டே சிரவணுதிகளினு லுண்டாய தத்வ சாக்ஷாத்காரத்தினை யுடைய, சகுணேபாசகர்கட்குப் பிரஹ் மாவோடு கூட மோக்ஷ மாம். தூம மார்க்கத்தினுற் பிதிர் லோகத்தை யடைந்த கர்மிகட்கு, போகத்தினுல் கர்மம் க்ஷயமாகு மிடத்து, முற் செய்த புண்ணிய பாவ அநுசா ரத்தினுல், பிரஹ்மா முதல் ஸ்தாவராந்தங்களில் மீண்டும் பிறப் பாம். ஆகவே, "நல்லதைச் செய்தவர்கள், நல்ல யோநியை யடைகின்றனர். கெட்டதைச் செய்தவர்கள் கெட்ட யோநியை (அடைகின்றனர்)" என்னுஞ் சுருதி (பிரமாணம்) ஆம்.

நிஷித்த கர்மங்களை யநுஷ்டிப்பவர்களோ, ரௌரவாதி நரக விசேஷங்களில், அவ் வப் பாவ உசித தீவிர துக்கத் தினை யநுபவித்துப், பன்றி முதலிய திரியக் யோநிகளிலும், தாவர முதலியவற்றிலும் பிறப்பர். ஆகலின், பிரசங்கத் தால் வந்த விஸ்தாரத்தினுல் வியர்த்த மாம்.

நிர்க்குணப் பிரஹ்ம சாக்ஷாத்கார முடையவர்கட்கோ, வேறு லோகஞ் செல்ல லின்றும். "அவனது பிராணன் கள் உயரக் கிளம்புவன வல" என்னுஞ் சுருதியால். பின்ன ரோ, பிராரப்த கர்ம க்ஷய பரியந்தம், சுக, துக்கங்களை யநுபவித்துப், பின்னர் மோக்ஷ மடைகின்றனர்.

அற்றேல், "அந்தப் பராபரத்தைப் பார்க்கில், இவனது கர்மங்கள் நாசத்தை யடைகின்றன" என் பதாதி சுருதியி னுலும், "சர்வ கர்மங்களையும் ஞாநாக்கிநி பஸ்ம மாக்கின் றது" (பகவற் கீதை) என்னும் ஸ்மிருதியாலும், ஞாநத்

திற்குச் சகல கர்ம நாச காரணத் தன்மை நிச்சயமாகு மிடத்துப், பிராரப்த கர்மம் நிலைத்தல் பொருந்ாதா மாலோ வெனின், அற் றன் று; "அவனுக்கு எது வரை மோக்ஷ மடைய வில்லையோ, அது வரையே நீணு ளாம். பின் மோக்ஷ மடைகின்ருன்" என்ப தாதி சுருதியாலும், "புஜிக்காது கர்மங்கள் நாச மடைவ தில்லை" என்ப தாதி ஸ்மிருதியாலும், உற்பத்தி யாய காரியத்தினை யுடைய கர்மத்தினின்றும், அந்நிய மாய சஞ்சித கர்மங்கட்கே, ஞானத் தினுல் நாச மாந் தன்மை யறியப்படுதலின்.

சஞ்சிதம்—புண்ணியமும், பாவமு மென இரு வகைத் தாம். ஆகவே, "அவனது புத்திரர்கள் தாயத்தினை யடை கின்றனர், மித்திரர் புண்ணியத்தை யடைகின்றனர். த்வேஷிகள் பாவத்தை யடைகின்றனர்" என்னுஞ் சுருதி பிரமாண மாம்.

அற்றேல், பிரஹ்ம ஞானத்தினுல், மூலாஞ்ஞான நிவிர்த் தியாகுமிடத்து, அதன் காரி மாய பிராரப்த கர்மமும் நிவிர்த்தி யாகலின், ஞானிக்குத் தேக தாரணம் எங்ஙனம் பொருந்துகின்ற தெனின், அற் றன் று; பிரதிபந்த மின் றிய ஞானத்திற்கே அஞ்ஞான நிவர்த்தகத் தன்மை யுள வாகலின், பிராரப்த கர்ம ரூபப் பிரதிபந்தக மிருக்குங் காலத்து, அஞ்ஞான நிவிர்த்தி அங்கிகரிக்காமையின்.

அற்றேல், இங்ஙன மாயினும், தத்துவ ஞானத்தினுல், ஒருவனுக்கு முத்தி யுண்டாயில், எல்லோருக்கு முத்தி யுண்டாம், அவித்தைக்கு ஏகத் தன்மை யுள வாகலின். அத னிவிர்த்தியில், ஓரிடத்துஞ் சம்சாரம் பொருந்தா



தாகலின் எனின், அற் றன் று; இஷ்டப் பிராப்தியான் எனச் சிலர் கூறுகின்றனர். அந்நியரோ, இத் தூஷணத் தின் பரிகாரத்தின் பொருட்டே, "பரமேசுவரன் மாயை களால்" என்னும் பகு (பன்மை) வசந சுருதியினு லநுக் கிரகிக்கப்பட்ட அவித்தையி னுநாத் தன்மையினை அங்கீ கரிக்கத் தக்கதா மென்று கூறுகின்றனர்.

மற்றுஞ் சிலர், அவித்தை ஒன்றே யாம். அந்த அவித்தைக்கே, ஜீவ பேதத்தினுல், பிரஹ்ம ஸ்வரூபத்தினை மறைக்குஞ் சக்திக ளநந்த மாம். ஆகவே, எவனுக்குப் பிரஹ்மஞானமோ, அவனுக்குப்பிரஹ்ம ஸ்வரூபத்தினைமறைக் கும் ஆவரண சக்தி விசிஷ்ட அவித்தை நாச மாம். அந்நி யனைக் குறித்துப் பிரஹ்ம ஸ்வரூப ஆவரண சக்தி விசிஷ்ட அவித்தையி னுச மின்ரு மென அங்கீகரித்திருத்தலின். ஒருவனுக்கு முத்தி யுண்டாகில், எல்லோருக்கும் முத்தி யின்ரும். இதனுனே, "அதிகாரிகட்கு எதுவரை அதி காரம், அதுவரை நிலைத்த லாம்" என்னு மதிகரணத்தில், தத்துவ ஞான முண்டாகிய அதிகாரி புருஷர்க ளாகிய இந்திராதிகட்குத், தேக தாரணத்தின் பொருத்த மின்மை யினை ஆசங்கித்து, அதிகாரத்தினைச் சம்பாதிக்கும் பிரா ரப்த கர்மம் முடிந்த பின்னர், விதேக கைவல்ய முண்டாம் எனச் சித்தாந்தஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அது, "உபாசநாதிகளினுல் கிடைத்த சித்தியினுல், ஈசுவரனுக்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணி, அடைந்த அதிகாரத்தினை முடித்து, இவர்கள் பரம பதத்தினை யடைகின்றனர்" என ஆசாரிய ராகிய வாசஸ்பதி மிசிரராற் கூறப்பட்டிருக்

கின்றது. இதுவும், ஒருவனுக்கு முக்தி யுண்டாகில், எல்லோருக்கு முக்தி யுண்டாம் என்னும் பக்ஷத்திற் பொருந்துவ தின்றாம்.

ஆகலின், அவித்தை ஒன் றென்னும் பக்ஷத்திலும், ஒவ்வொரு ஜீவனிடத்தும் ஆவரண பேத மங்கீகரித்தலால், வியவஸ்தை பொருந்துகின்றது.

ஆகலின், இவ் வாறு, பிரஹ்ம ஞாநத்தினல் மோக்ஷமாம். அதுவும், அநர்த்த நிவிர்த்தியும், நிரதிசயப் பிரஹ்மாநந்தப் பிராப்தியு மாம். ஆகலின், பிரயோஜநஞ் சித்தமாயிற்று.

பிரயோஜந[illegible] முற்றுப் பெற்றது.

ஸ்ரீ தர்ம ராஜ தீக்ஷிதர் அவர்கள் இயற்றிய

வேதாந்த பரிபாஷை முற்றுப் பெற்றது.

ஸ்ரீ [illegible] மங்கலம்.





# திருப் பூவண மடாதிபதி,
# காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,
# இயற்றியன, பதிப்பித்தன.



| | | ரூ. அணா |
|---|---|---|
| 1. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா—வசநம் | 2—8 |
| 2. | விசார சாகரம்—வசநம் | 2—0 |
| 3. | ஞாந வாசிட்டம்—கவி (2055) | 2—0 |
| 4. | கீதாத் திரயம்—கவி (1430) பாக்கேட் | 1—0 |
| 5. | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி—கவி (1135) | 1—0 |
| 6. | வீர சேகர ஞாந தேசிக சரிதம்—வசநம் | 1—0 |
| 7. | ஹரி மீடே—ஹரி தத்வ முக்தாவலீ—வசநம் | 0-12 |
| 8. | நைஷ்க்கர்ம்ய சித்தி—வசநம் | 0—8 |
| 9. | வியாச தாத்பர்ய நிர்ணயம்—வசநம் | 0—8 |
| 10. | வேதாந்த சித்தாந்த முக்தாவலீ—வசநம் | 0—8 |
| 11. | வைராக்ய தீபம்-பத வுரையும், பொழிப் புரையும் | 0—8 |
| 12. | வேதாந்த பரிபாஷை—வசநம் | 0—7 |
| 13. | ஸ்வாராஜ்ய சித்தி—வசநம் | 0—4 |
| 14. | சீடாசாரம்—பால போதிநி—உரை | 0—4 |
| 15. | ஈசாவாஸ்யோபநிஷத்—சங்கர பாஷ்யம் | 0—4 |
| 16. | மண்டலப் பிராஹ்மணோபநிஷத்—ராஜ யோக [பாஷ்யம் | 0—4 |
| 17. | கைவல்ய நவநீதம் கவி (288) | 0—3 |
| 18. | பக்தி (வைராக்ய) சதகம்—தோத்திரப் பிரகாச [உரை | 0—3 |
| 19. | வேதாந்த சஞ்ஞா—வசநம் | 0—2 |
| 20. | பகவற் கீதை கவி (545) | 0—6 |
| 21. | பிரஹ்ம கீதை கவி (547) | 0—6 |
| 22. | ஈசுவர கீதை கவி (338) | 0—4 |